உ

சிவமயம்

# சைவ சித்தாந்தத்தில் ஞானநெறி



டாக்டர். ஞானப்பூங்கோதை மோகனசுந்தரம்

நமச்சிவாய பதிப்பகம்
மதுரை
2002

## பதிப்பு விவரங்கள்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **சைவ சித்தாந்தத்தில் ஞானநெறி** |
| பதிப்பாசிரியர் | : | டாக்டர். ஞானப்பூங்கோதை மோகனசுந்தரம் |
| முதற்பதிப்பு | : | ஆகஸ்ட் 2002 |
| உரிமை | : | ஆசிரியருக்கு மட்டும் |
| தாள் | : | சேஷாயி ஒயிட் 6.6 |
| அளவு | : | கிரவுன் 1x8 |
| பக்கங்கள் | : | 96 + viii |
| விலை | : | ரூ. 45.00 |
| வெளியிடுவோர் | : | **நமச்சிவாய பதிப்பகம்** |
| அச்சுக்கோர்வை | : | சந்தோஷ் பாரதி சிஸ்டம்ஸ் & கிராபிக்ஸ்<br>428, மீனாக்ஷி நிலையம், வெல்லிங்டன் ரோடு<br>நாகமலை, மதுரை – 625 019.<br>போன் : (0452) 458093, செல் : 98421–58093. |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ சாரதா ஆப்செட்<br>7/20, நாகமலை, மதுரை – 625 019. |

---

This book is published with the financial assistance of **THIRUMALA TIRUPATI DEVASTHANAMS**, under their scheme aid to publish religious books.

My sincere thanks to Thirumala Tirupati Devasthanams Tirupathi.

- Author

உ



ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
ஞானத் தால்தொழு வேனுனை நானலேன்
ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தாய்உனை நானுந் தொழுவேனே

- அப்பர் சுவாமிகள்

# அணிந்துரை

**முனைவர் ஆ. ஆனந்தராசன்,**
*பேராசிரியர் (ஓய்வு)*

இந்நாளில ஆய்வு என்ற பெயரால் மேற்போக்கான முறையில் 'நுனிப்புல் மேய்ந்து' ஏனோ தானோ என்று எழுதித் தந்து பட்டம் வாங்கி விடலாம என்ற எண்ணம் படித்தவரிடையே இருத்தல் கண்கூடு. இப்படிப்பட்ட எண்ண முடையவர்கள் தத்துவத் துறையின் பக்கம் எட்டியும் பார்கக மாட்டார்கள்!

சைவ சித்தாந்த தத்துவத்தில் ஆய்வு செய்வதற்கு முதலில் வேடகையிருத்தல் வேண்டும், அதற்கு ஏற்ற அறிவுத் தகுதியிருத்தல வேண்டும், சாத்திர தோத்திர நூல்களில் பயிற்சியிருத்தல் இன்றியமையாதது இன்ன பல தகுதிப்பாடு உடைய மாணவர்களைக் காண்பது மிகவும் அரிதாகவே உள்ளது

முனைவர் திருமதி ஞானப்பூங்கோதை அவர்கள்பால் மேற்கூறிய இயலபுகளைக் கண்டு மகிழ்ந்தவன் நான். அவர் எனது வழிகாட்டலில் முன்னர் எம் பில் பட்டம் பெற்று, அதனைத் தொடர்ந்து 'சைவ சித்தாந்தத்திற்கு ஸ்ரீ குருஞானசம்பந்தரின் அருட்கொடை' என்ற தலைப்பில் முனைவர் பட்டமும் பெறறவர் அவர் எம் பில பட்டத்திற்கு அளித்த ஆய்வேடே இந்நூலாக இப்பொழுது மலர்கிறது

ஞானமாவது மெய்யுணர்வு, பொருள்களின் இயல்பை உள்ளவாறு உணாவது பொருள்களாவன கடவுள, உயிர், உலகு என்பன. இம்மூன்றன் இயலபையும நாம உள்ளவாறு உணர்தல் வேண்டும். 'நான் அறிவாகிய சித்துப் பொருள், எனக்கு வேறறினமாகிய அறிவற்ற சடவுலகோடு கூடிவாழ்கிறேன இவ்வுலகச் சார்பு எனக்கு இயற்கையன்று இஃது இடையில் வந்தது, இடையில நீங்கக் கூடியது எனக்குரிய உண்மையான சாாபு - என்றைக்கும உள்ள நிலையான சார்பு இறைவனாகிய சார்பே யாகும் அவனே எனக்கு வாழ்முதல, அவனே எனக்குப் புகல் அவனை அணைந்து இனபுறுதலே பிறவியெடுத்ததன பயன்' இவ்வாறு உயிராகிய தன் இயல்பையும, தலைவனாகிய இறைவனது இயல்பையும், உலக நிலையையும உள்ளவாறு உணர்தலே உண்மை ஞானமாகும

இந்த ஞானம என்ற பெரும பொருளை எடுத்துக் கொண்டு எளிய முறையில் விளக்கிக் காட்டுகிறது இந்நூல் ஞானமே வீடு பேற்றிறகு வழி எனபதையும, ஞானம கிடைபபதற்கு வழி தவம்

என்பதையும், தவத்தின் வகைகளையும், தவத்தின் பயனாக நிகழும் பக்குவ நிலைகளையும் இறைவன் குருவாக வந்து ஞானம் உணர்த்தும் முறையையும், அவன் உணர்த்திய ஞானத்தைக் கேட்டுப் பின் பலகாலும் சிந்தித்துத் தெளிவு பெற்றுத் திருவருளோடு ஒன்றுபட்டு அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யானாய் இறைபணியில் நின்று பாசப் பற்றை அறுத்து முடிவில் சிவப் பேறாகிய நிட்டையில் அழுந்தி நின்று இன்புறும் முறையையும் இந்நூல் தெளிவாக உணர்த்தி நிற்கிறது

சுருங்கக் கூறினால், இந்நூல் சைவ சித்தாந்தம் கூறும் வீட்டு நிலையை விளக்கிக் காட்டும் ஒரு கைவிளக்கு எனலாம்.

இந்த நூல் அளித்த ஆசிரியருக்கு என் நல்வாழ்த்துக்கள் திருவருளும் குருவருளும் சிறக்க விளங்கும் இந்த ஞானப் பெண்மணியால் சைவ வுலகம் மேலும் பல நலன்களைப் பெறுக

# நன்றியுரை

சைவ சித்தாந்தம் பற்றித் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும் என்னும் ஆர்வத்தைத் தோன்றாத் துணையாய் என்னுள் நின்று தோற்றுவித்த அண்ணல் - ஆலவாயில் உறையும் எம் ஆதியின் திருவருளுக்கு முதற்கண் எனது வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

சைவ சித்தாந்தத்தில் ஈடுபட தூண்டுகோலாய் இருந்த "சித்தாந்த சரபர்" - திரு. சி. ஈசுவரநாயகம் பிள்ளை, "சித்தாந்த வித்தகி", "சிவநெறிச்செயிழை" - திருமதி சி.ஈ.என். ஈசுவரவடிவு அம்மாள் தம்பதியரை என்றும் மறவாது போற்றும் கடமை உடையேன்.

இந்த ஆய்விற்கு மேற்பார்வையாளராக இருந்து, அரிய கருத்துக்களைத் தகுந்த இடத்தில் அமைய வழிவகுத்து, கருத்து வேறுபாட்டில் சிறந்த விளக்கமளித்துத் தெளிவித்து உதவியதுடன் இந்நூலுக்கு அணிந்துரையும் வழங்கியுள்ள ஆசிரியச் செம்மல் டாக்டர் திரு ஆ. ஆனந்தராசன் அவர்களுக்கு உளமார்ந்த வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும், நூல்கள் வழங்கி உதவிய டாக்டர் திருமதி கோமதி சூரியமூர்த்தி அவர்களுக்கும், துறைத்தலைவர் டாக்டர் ச. கங்காதரன் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்

இந்த ஆய்வேடு நூல்வடிவில் வெளிவருவதற்கு நிதி உதவியளித்த திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தைச் சார்ந்த அனைவருக்கும் என் மனங்கனிந்த நன்றி

எல்லோருக்கும் மேலாக, இந்த ஆய்வுப் பணியை தொடங்கியதிலிருந்து, அது நூலாக வெளிவரும்வரை எல்லா வகையிலும் பக்கபலமாகத் துணை நின்ற என் கணவர் பொறியர் திரு. க மோகனசுந்தரம் அவர்களுக்கும், என் குழந்தைகள் இருவருக்கும் நன்றி கூற மிகவும் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலை நன்முறையில் அச்சிட்டு உதவிய சந்தோஷ் பாரதி பிரிண்டர்ஸ் & கிராபிக்ஸ் நிறுவனத்தார்க்கும் மிக்க நன்றி

- ஞானப்பூங்கோதை மோகனசுந்தரம்

# பொருளடக்கம்


| இயல் | | பக்கம் |
|---|---|---|
| 1. | சைவ சித்தாந்தம் அறிமுகம் | 1 |
| 2. | சைவ சித்தாந்தம் கூறும் ஞானம் | 9 |
| 3. | ஞானத்தைப் பெறும் வழிகள் | 15 |
| 4. | ஞானத்தின் படிநிலைகள் | 32 |
| 5. | ஞானம் பெற்றோர் நிலை | 61 |
| 6. | தசகாரியப் படிநிலைகள் | 72 |
| 7. | பன்னிரு திருமுறைகளில் ஞானச் செய்திகள் | 83 |

## சுருக்கக்குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அதி | – | அதிகரணம் |
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| கு.ஆ | – | குறிப்புரையாசிரியர் |
| சூத். | – | சூத்திரம் |
| ப | – | பக்கம் |
| பக் | – | பக்கங்கள் |
| ப.ஆ. | – | பதிப்பு ஆசிரியர் |
| பா | – | பாடல் |
| மேலது | – | மேலே காட்டிய நூல் |
| P | – | Page |

## மன்றம், கழகம், பதிப்பகங்கள்

| | | |
|---|---|---|
| அ.அ.மன்றம் | – | அருணந்திசிவம் அருட்பணி மன்றம், சிந்துபூந்துறை, திருநெல்வேலி–1. |
| அ.ப.க. | – | அண்ணாமலை பல்கலைக்கழகம் |
| கழகம் | – | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை. |
| சமாஜம் | – | சைவ சித்தாந்த சமாஜம், சென்னை. |
| மன்றம் | – | சைவ சித்தாந்த பெருமன்றம், சென்னை. |

# சைவ சித்தாந்த ஞான பரம்பரை
## சந்தான குரவர்கள்








மெய்கண்ட சிவம் அருணந்தி சிவம் மறைஞானசம்பந்தசிவம் உமாபதி சிவம்

ஈராண்டில் சிவஞானம் பெற்றுயர்ந்த மெய்கண்டார் இணைத்தாள் போற்றி
நாராண்ட பல்லடியார்க்கு அருள்புரிந்த அருள்நந்திற்றாள் போற்றி
நீராண்ட கடந்தை நகர் மறைஞானசம்பந்தர் நிழற்றாள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார் செம்பதுமத் திருத்தாள் போற்றி

இயல் ஒன்று

# சைவ சித்தாந்தம் - அறிமுகம்

## சைவ சித்தாந்தம் - பொருள்

சிவபிரானை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயம் சைவம் ஆகும். சைவசமயத்தின் அடிப்படைக் கொள்கைகளை விளக்குவதுடன் நுண் பொருள்களையும் உணர்த்துவது சைவசித்தாந்தம் ஆகும். சித்தாந்தம் என்பது முடிந்த முடிவு எனப்பொருள் தரும். சித்தம் + அந்தம் = சித்தாந்தம், சித்தம் - முடிவு; அந்தம் - முடிவு. சைவ மெய்ப்பொருள்களின் முடிந்தமுடிப்பைக் கூறுவது சைவசித்தாந்தமாகும். "அவையே உண்மைச் சித்தாந்தமாய் உள்ள சிறப்பு பற்றி சித்தாந்தம் என்பது சைவசித்தாந்தத்திற்கே பெயராயிற்று. இது மலர் என்பது தாமரை மலரையே குறிப்பது போன்றதும் 'பழம்' என்பது வாழைப்பழத்தையே குறிப்பது போன்றதும் ஆகும்".[1]

## சைவ சித்தாந்தச் சிறப்பு

"சித்தாந்தத்தே சீவன் முத்தி சிந்தித்தலான்"[2] என்று திருமூலரே சித்தாந்தம் என்னும் தொடரை முதலில் பயன் படுத்துகிறார். சைவ சித்தாந்தக் கொள்கைகள் மிகவும் பழமையானவை. இந்திய நாட்டு மெய்ப்பொருளியல் வகைகளுள் சைவசித்தாந்தம் மிகச் சிறந்தது என மதிக்கப்படுகிறது. "இந்தியர்களின் வாழ்விலும் சிந்தனையிலும் அமைந்த கோட்பாடுகளுள் மிகச் சிறந்த ஒன்றாக சைவசித்தாந்தம் அமைந்துள்ளது" என ஜான் பியட் கூறுகிறார்.[3]

"இந்திய நாட்டிலுள்ள சமயங்கள் எல்லாவற்றிலும் சைவ சமயமே மிக விரிந்ததும், பெரும்பாலான மக்களால் தழுவப் பெற்றதும், ஐயத்திற்கும் இடமின்றி உண்மையிலேயே பெருஞ்சிறப்பு வாய்ந்ததும் ஆகும்"[4] என்று ஜி.யு போப் கூறுகிறார்.

உலகியல் நெறிகளோடு ஒத்ததாய் அறிவியலுக்கு ஏற்புடையதாய் அனைத்து சமய நெறிகளையும் தழுவியதாய் விளங்குவது சைவ சித்தாந்தத்தின் சிறப்பாகும் இது பிற சமயங்களின் கொள்கைகளைக் காழ்ப்பின்றி ஆராய்ந்து நிறுவுகிறது. ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு அருளிச் செய்தவை வேதசிவாகமங்கள். வேதத்தின் முடிவே

வேதாந்தமாகும். அவ்வேதாந்த நூல்களின் தெளிவாகச் சைவசித்தாந்தம் விளங்குதலை உமாபதி சிவம்,

"புறச் சமயத் தவர்க்கிருளாய் அகச் சமயத் தொளியாய்ப்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோல பேதப்
பிறப்பிலதாய் இருள்வெளிபோல் பேதமுஞ் சொற் பொருள் போற்
பேதாபேதமுமின்றி பெருநூல் சொன்ன
அறத்திறனால் விளைவதாய் உடலுயிர்கண் ணருக்கன்
அறிவொளி போற் பிறிவரும் அத்துவித மாகுஞ்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்"[5]

என்ற சிவப்பிரகாசப் பாடலில் எடுத்துரைக்கிறார்.

புறப்புறச் சமயம், புறச்சமயம், அகப்புறச்சமயம், அகச்சமயம் ஆகிய இவை அனைத்திற்கும் வேறாக மேம்பட்டு திகழ்வது சித்தாந்த சைவமே. ஒன்றோடு ஒன்று ஒவ்வாத சமயங்களும், நூல்களும் பல உள எனினும் நீதியினால் இவை ஓரிடத்தே காண நின்றதாகிய சைவ சமயமே சமயப் பிணக்கறுத்த ஒருமை நெறி காட்டும் என்பதை

"ஓது சமயங்கள் பொருளுணரு நூல்கள்
ஒன்றோடொன் றொவ்வாம லுளபலவு மிவற்றுள்
யாதுசமயம் பொருணூல் யாதிங் கென்னின்
இதுவாகு மதுவல்ல தெனும் பிணக்க தின்றி
நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காண
நின்றதியாதொரு சமயமதுசமயம் பொருணூல்
ஆதலினா லிவையெல்லா மருமறையா கமத்தே
அடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்."[6]

என்ற பாடலில் அருணந்திசிவம் எடுத்துக் கூறுகிறார்.

இக்கருத்தையே மனத்தகத்துக் கொண்டு குமரகுருபரர் தாம அருளிய கந்தர்கலிவெண்பாவில்

"------------ தர்க்கமிடும்
தொன்னூல் பரசமயந்தோறும் அதுவதுவே
நன்னூல் எனத் தெரிந்து நாட்டுவித்து"[7]

என்று பாடியுள்ளார்

மேலும், சைவசித்தாந்தத்தை, வேதாந்தமென்னும் உச்சியிற் பழுத்த பழத்தைப் பிழிந்து எடுத்த சாறாக,

"ஓரும் வேதாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆரா வின்ப அருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவ சித்தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே"[8]

என்று பண்டாரமும்மணிக் கோவையில் குறிப்பிடுகின்றார்.

### *சைவ சித்தாந்தர்*

உயிர் ஈடேற்றம் பெற, உரிய வழிமுறைகளை சிறப்புற இயம்புவது சித்தாந்த உண்மை நெறி. சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் இந்நெறிகளைப் பின்பற்றி, படிமுறையில் வளர்ந்து இறுதியில் தம்மையும், தலைவனையும், உணர்ந்தோரே சைவசித்தாந்தர் என்பதை,

"கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோகம்
முற்பத ஞான முறை முறை நண்ணியே
சொற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர் சைவசித்தாந்தரே"[9]

என்று திருமந்திரம் கூறுகிறது.

### *சைவசித்தாந்தம் கூறும் முப்பொருள்கள்*

சைவசித்தாந்தத்தில் முடிந்த முடிபாகக் கொள்ளப்படும் பொருள்கள் மூன்று. அவை பதி, பசு, பாசம் என்று வழங்கப்படும் இந்த மூன்று பொருள்களுக்கும் எந்நாளிலும் தோற்றமும் இல்லை. முடிவும் இல்லை. இவை அநாதியாகும்.

"சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள்
மூன்றுள-மறையெலாம் மொழிய நின்றன
ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த் தொகை
வான்திகழ் தளையென வகுப்பர் அன்னவே"[10]

என்கிறது கந்த புராணம்.

இதையே திருமூலரும்,

"பதி பசு பாசம் எனப்பகர் மூன்றின்
பதியினைப் போற் பசுபாசம் அநாதி"[11] - என்கிறார்

பதியாகிய கடவுள் என்று உண்டோ அன்றே பசுவாகிய உயிரும், அவ்வுயிர்களைப் பிணித்துள்ள தளையாகிய பாசமும் உண்டு என்பதே சைவசித்தாந்தக் கொள்கையாகும்.

### பதி இயல்பு

அகர உயர் போல அறிவாகி எங்கும் நிகரின்றி நிற்கின்ற இறையாகிய பதி ஒன்றே.[12] பதிபொருளை 'ஏகம்' என்று உபநிடதங்கள கூறும

"ஒன்றென்ற தொன்றே காண்-- ஒன்றே பதி"[13] என்று சிவஞானபோதமும், "ஏகன் அனேகன் இறைவன் அடிவாழ்க"[14] என்று திருவாசகமும் கூறுகின்றன. அந்த இறைவனையே சிவன் என்கிறது சைவசித்தாநதம.

எல்லா பொருள்களுக்கும் ஆதியாகவும், அவ்வெல்லாப் பொருள்களும் இறுதியில் ஒடுங்குவதற்கு இடமாக அவற்றின அநதமாகவும உள்ள சிவன் தனக்கு ஆதியும் அந்தமும் இல்லா அருடபெருஞ்சோதியாவான்.

அவன் தானேயறியும் சித்துப்பொருள். முழுவதும் ஒருங்குணரும் முறறறிவு உடையவன். ஓர் எல்லைக்கு உட்படாமல், எல்லாவற்றையும் ஒரே நேரத்தில ஒருங்கே உணரும் அவன் தன்மையை,

"ஒன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே-- எவ்வுலகும்
ஒன்று ஒன்றாப் பார்க்கும் உணர்ந்து"[15]

எனகிறது சிவஞானபோதம்

எசசெயலையும் எக்காலத்தும் செய்ய வல்ல பேராற்றலாய் நிற்கும இறைவன பேரருள் வடிவாய் உள்ளவன். நிறகுணனாய, நின்மலனாய், நித்தியானந்தனாய், தற்பரமாய், தனிமுதலாய், உயிர்களின அறிவிறகுள் அறிவாய் அளவறிந்து நிற்கின்ற இறைவன்[16] உயிர்கள யாதொரு தெய்வங் கொண்டிடினும் அத்தெய்வமாகி[17] ஆங்கே அவ்வுயிாகளிடத்து மிகக் கருணையும் இரக்கமும் கொண்டு அவற்றின தீராப பிணி தீர்க்கும் பேரன்புடையவன் ஆவான்.

### பசு இயல்பு

பசு எனபதற்கு "பாசத்தால் கட்டப்பட்டது; இயற்கையிலே ஆணவததால கடடுண்டு கிடககின்ற உயிரைக குறிக்கும" எனறு

விளக்கம் தருவர் அறிஞர்.[18] இவ்வுயிர் அறியும் தன்மையுடைய சித்துப்பொருள் என்றாலும் தானே அறியாது, அறிவித்தால் அறிவும் சிற்றறிவு உடையது. உயிர்கள் எண்ணிறந்தவை.

"உரை சேரு மெண்பத்து நான்கு நூறாயிரமாம்யோனிபேத
நிரை சேரப் படைத்து ----" [19]

என்கிறது ஞானசம்பந்தர் தேவாரம்.

உயிர் பல்வேறு வகைப் பிறவிகளையும் உடையது.

மாணிக்கவாசகரின்,

"புல்லாகிப் பூடாய் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகி
கல்லாய் மனிதராய் பேயாய் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்---- "[20]

என்ற திருவாசக வரிகள் இதனைப் புலப்படுத்துகின்றன.

இவ்வுயிர்கள் ஒரு காலத்தில் தோன்றியன அல்ல. இறைவனால் படைக்கப்பட்டனவும் அல்ல. இறைவன் என்று உண்டோ அன்றே அவையும் உள்ளன. அவற்றிற்கு அழிவும் இல்லை தோற்றமும் இல்லை. அவை என்றும் உள்ளவை.

இவ்வுயிர் சார்ந்ததன் வண்ணமாகும் தன்மையுடையது. இவ்வுலகைச் சார்ந்து நிற்கையில் அசத்தாய் நின்று இறைவனை உணராது துன்புறும். அன்றி இவ்வுலகச் சார்பை நீக்கி விட்டால் இறைவனை அடைந்து இன்புறும்.

## 'ாச இயல்பு

### ஆணவம்

உயிர்களிடம் அவற்றை உணர விடாது மறைத்து நிற்பதாகிய .ா அழுக்கு இயற்கையிலேயே உள்ளது. அரிசியை உமி மறைப்பது போன்றது இது. அரிசி உள்ள அன்றே உமியாகிய குற்றமும் அதனுடன் பொருந்தியிருப்பதைப் போல உயிர்கள் உள்ள அன்றே அவ்வழுக்கும் உடனாய் உள்ளது இதனை ஆணவ மலம் எனபா

"நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினிற் களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே."[21]

என்கிறது சிவஞானபோத எடுத்துக்காட்டு வெண்பா.

உயிரின் அறிவிற்கு முதல் தடையாய் உள்ள இந்த ஆணவமலமே மூலமலம் ஆகும். உயிரின் அறிவை அறியாமையில் கட்டுண்டு நிற்கச் செய்வதால் இதனைப் பாசம் (கயிறு) என்பர்.

"பொல்லாத ஆணவம்"[22] எனப்படும் இம்மூலமலம், தான அவ்வாறு உயிருடன் பொருந்தியுள்ளதையும் அறியச் செய்யாது இதனை,

"ஒரு பொருளும் காட்டாது இருள் உருவம் காட்டும்
இரு பொருளும் காட்டா திது"[23]

என்கிறது திருவருட்பயன்.

ஆணவத்தின் சக்திகள் பல்வேறு வகைப்பட்ட வன்மை மென்மைகளை உடையனவாகும். அவற்றை தூலம், சூக்குமம் அதிசூக்குமம் என மூவகைப் படுத்துவர். இவையே உயிர்கள மூவகைப் பட்டு நிற்பதற்குக் காரணமாகும். சகலர் ஆணவம்(தூலம்) கன்மம், மாயை என்னும் மும்மலமும், பிரளயாகலர் ஆணவம்(சூக்குமம்), கன்மம் என்னும் இருமலமும், விஞ்ஞானகலா ஆணவம் (அதி சூக்குமம்) என்னும் ஒரு மலமும் உடையராகின்றனர்

**கன்மம், மாயை**

ஆணவ மலத்தோடு கூடி கேவல நிலையில் துன்புறும உயிர்களின நிலை கண்டு இரங்கிய இறைவன் அம்மலத்தை நீக்கும பொருட்டு அவ்வுயிர்களை உலக வாழ்விற் (கன்மம்) செலுத்துகிறான அவ்வுயிர்கள் தங்குவதற்கு உடம்பையும், அறிவதற்கு ஐம்பொறி முதலிய கருவிகளையும், இயங்குவதற்கு உலகத்தையும், நுகர்வதறகு உலக பொருள்களையும மாயை என்னும் மூலப்பொருளிலிருந்து உண்டாக்குகிறான்

இறையருளால் மாயையோடு கூடி சகல நிலைக்கு வந்த உயிர்கள் சிற்றறிவும் சிறுதொழிலும உடையனவாய் தம் மனம், மொழி மெய்களினால நலலனவும் தீயனவும் ஆகிய செயல்களைச செயகின்றன

இக்கன்மம் சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என மூவகையில் கூறப்படும் ஒருவன் இப்பிறப்பில் செய்த வினை, 'ஆகாமியம்' எனப்படும். அவ்வினை செய்த அப்பொழுதே அழிந்து விடுவதுபோல் தோன்றினாலும் அவ்வாறு அழிதல் இல்லாது சூக்குமமாய் நிலைத்து நிற்கும். இவ்வாறு செய்த பல வினைகளின் தொகுப்பே, 'சஞ்சிதம்' எனப்படும். இந்த சஞ்சிதத்திலிருந்து உயிர் ஒரு பிறப்பில் நுகர்வதற்கு முகந்த கொண்ட பக்குவப்பட்ட வினை, 'பிராரத்தம்' எனப்படும்.

இக்கன்மத்திற்கு ஏற்ப அவற்றிற்குப் பிறப்பு இறப்புகளையும், இன்ப துன்பங்களையும் இறைவனே அளிக்கின்றான். மாயையும், கன்மமும் சேர்ந்து உயிர்களுக்கு அறியாமையை நீக்கி அறிவை விளங்கச் செய்கின்றன.

## முப்பொருளுக்கும் உள்ள தொடர்பு

இறை, உயிர், தளை என்னும் இம் முப்பொருள்கட்கும் இடையே உள்ளது, 'வியாபக- வியாப்பிய- வியாத்தித்' தொடர்பாகும் இத்தொடர்பைச் சிவஞானபோதம்

"தண் கடனீ ருப்புப் போல்"[24]

என்னும் உவமை மூலம் விளக்குகின்றது.

கடல்வெளி--வியாபகம்; நீர்--அந்த இடம் முழுவதிலும் உள்ளடங்கி இருத்தலால் -- வியாப்பியம்; உப்பு--நீர் முழுவதும் கலந்திருத்தலால்--வியாத்தி; கடல் வெளி போன்றது இறை. அதில் உள்ள நீர் போன்றது உயிர், உப்பு போன்றது தளை.

இவை மூன்றும் ஒன்றில் ஒன்று அடங்கி வேற்றுமையின்றி ஒன்றுபட்டே நிற்கும்.

இதில் உப்பு பருமையானது. அது பருப்பொருளாகிய நீரைப் பற்றியிருக்குமேயன்றி நுண்ணியதாகிய கடல்வெளியைப் பற்றமாட்டாது. எனவே உப்பிற்கும் நீருக்கும் இயைபு உண்டே தவிர உப்பிற்கும் கடலுக்கும் இயைபு இல்லை என்பது புலனாகும். ஆயினும் நீருக்கு கடல வெளியோடும் இயைபு உண்டு, உப்போடும் இயைபு உண்டு அதுபோல பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களில் பதிக்கும் பாசத்திற்கும் இயைபு இல்லாதொழிய, நடுவில் உள்ள பசுவாகிய உயிரே அவ்விரண்டினோடும் இயைபு கொள்வதாயிற்று

## முத்தி நிலை

சித்தாகிய ஆன்மாவற்குச் சித்தாகிய சிவமே தன்னினம் ஆகும சடமாகிய உலகம் வேற்றினம் ஆகும் எனவே ஆன்மா தன்னினமாகிய சிவத்தோடு கூடி நிற்றலே இயற்கை யாகும். இவ்வுலகமாகிய தளையோடு கூடியிருப்பது 'பந்தம' எனப்படும் கட்டுநிலையாகும் இக்கட்டுநிலையிலிருந்து விடுபட்டு இனிய உறவாகிய இறைவனைச சார்ந்து இன்புறுதலே 'முத்திநிலை' யாகும். அத்தகைய முத்திநிலையைப் பெறுவதற்குச் சாதனமாக இருப்பது ஞானம் ஆகும்

## அடிக்குறிப்புகள்

1. அருணை வடிவேல் முதலியார், சித்தாந்த வினாவிடை, ப 40.
2 சித்தலிங்கம் டி.பி., சைவ சமய தோற்றமும் வளர்ச்சியும், ப.9
3 அழகப்பன், "உவமை வழி விளக்கப்படும் மெய்ப்பொருள்கள்" Proceedings of second international saiva siddhanta seminar Malaysia-1986.ல்.36
4. Dr. G U Pope. Thiruvachakam. p xxiv.
5. சிவபிரகாசம், 7
6. சித்தியார், சூத்.8. பா.13.
7. குமரகுருபரர், கந்தர் கலிவெண்பா, கண்ணி.17,18.
8 ..............., பண்டார மும்மணிக்கோவை,
9. திருமந்திரம், 5ம் தந்திரம், பா.226.
10. கந்தபுராணம், 1962
11 திருமந்திரம், முதல்தந்திரம், பா.2
12. திருவருட்பயன்.1
13. சிவஞானபோதம், சூத்.2: அதி.1: உ.வெ.2.
14. திருவாசகம், சிவபுராணம், வரி-5
15. சிவஞானபோதம், சூத் 11· அதி.1· உ.வெ.1.
16 . . சூத்.9: அதி.1: உ.வெ.1.
17. சித்தியாா, சுபக்கம், சூத்.2: பா.25.
18. சி.அருணை வடிவேல் முதலியார், முப்பொருள்இயல்பு, ப.50
19. ஞானசம்பந்தர் தேவாரம், 1:132.4
20. திருவாசகம, சிவபுராணம். வரிகள-26-29.
21. சிவஞானபோதம், சூத் 2· அதி 2. உ.வெ.3.
22 சித்தியார், சூத் 2· பா 79
23. திருவருட்பயன், 23
24. சிவஞானபோதம், சூத் 7: உ.வெ 3

*இயல் இரண்டு*

# சைவசித்தாந்தம் கூறும் ஞானம்

**ஞானம்-பொருள் விளக்கம்**

ஞானம் என்பது பொதுவாக அறிவு என்றே பொருள் படும். எனினும் எப்பொருளையும் உள்ளது உள்ளவாறு உணர்ந்து, அதன் உட்பொருளை அறிவதே ஞானமாகும்.

பொதுவாக அறிவு மூன்று வகையாய் நிகழும். அவை, ஐயம், திரிபு, உண்மை என்பன. ஒரு பொருளை இதுவோ அதுவோ என இரட்டுற அறிதல் ஐயமாய் அறிதலாகும். அவ்வாறல்லாது ஒன்றை மற்றொன்றாகவே மாறி அறிதல் திரிபாய் அறிதலாகும். இவ்விரு குற்றமும் இன்றி ஒரு பொருளை உள்ளவாறு அறிதலே உண்மையாய் அறிதலாகும். இவ்வுண்மையறிவே ஞானமாகும். திருவள்ளுவரும்,

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"[1]

என்கிறார். இதன் பொருள்,

"யாதொரு பொருள் யாதொரு தன்மைத்தாயிருப்பினும், அப்பொருளினுடைய உண்மைத் தன்மையைக் காண்பது யாதொன்று அஃது அறிவாம்." என்பதாகும்.[2]

இவ்வுலகத்துத் தோன்றுகின்ற பொருள்களை ஐம்புலன்களால் கண்டு அதன்பின் அப்பொருள்களைக் கண்ட வாற்றால் தெளியாது அவற்றின் உண்மையைப் போக்கற ஆராய்ந்து காண்பது மெய்யுணர்வு (ஞானம்) என்று கூறப்படும்.

மெய்யுணர்தலாவது எக்காலத்திலும் எவ்விடத்தும் அழியாது நிற்கும் பொருள் இதுவென உணர்தல் ஆகும். இது உலகப் பற்றறத் துறந்தோரது உள்ள நிகழ்ச்சியாதலினாலேயே திருக்குறளில் "மெய்யுணர்தல்" அதிகாரம் "துறவு" என்ற அதிகாரத்தின் பின் கூறப்பட்டது[3] என்பர்.

"ஞானமாவது வீடுபயக்கும் உணர்வு. அது நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவா அறுத்தல் என்னும் நான்கு அதிகாரத்துள் அடக்கப்பட்டது"[4] என்பார் பரிமேலழகர்.

மெய்ப்பொருளை அறிந்து தெளிந்தாரே மீண்டும் இந்த உலகிற்கு வாராத நெறியினை அடைவர். அதாவது, பிறப்பாகிய அறியாமையினின்று நீங்கிப் பிறவாமையாகிய செல்விய பொருளைக் காண வல்லது ஞானமே.[5]

"ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்"[6]

என்பது திருக்குறள்.

இந்தியத் தத்துவங்கள் அனைத்தும், உயிரானது வினைநீக்கம் பெற்று அதன் இயல்பான தன்மையைப் பெறுதலே முத்திநிலை என்று கூறுகின்றன. மேலும், அதனைப் பெறுவதற்கு உயிர் இத்தகைய விவேக ஞானம் பெறுதல் ஒன்றே வழி என்றும் கூறுகின்றன.

*சைவ சித்தாந்தம் கூறும் ஞானம்*

அறிவு யாவும் ஞானமேயாயினும் மெய்ப்பொருளாகிய இறைவனை அறியும் அறிவே ஞானம் என சைவசித்தாந்தம் கூறுகிறது.

"இறைவனடி ஞானமே ஞானம்"[7] - என்கிறது சித்தியார்.

ஞானம் என்பது ஞானாசிரியர் உணர்த்தியதை உணர்த்தியவாறு ஐயமும் திரிபுமின்றி திருவருளையே கண்ணாகக் கொண்டு அறிகின்ற அறிவினையாகும்.

எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அத்தன்மையினைச் சுட்டி நில்லாது அப்பொருட்கண் அதுவே தானேயாந் தன்மையில் தங்கி நின்று அதனை நடத்தும் மெய்ப்பொருளை உணர்த்துவதுவே ஞானம்.

இம்மெய்யுணர்வே சிவமாம் செம்பொருளின் அருளொளியைக் காட்டாக நிகழ்வதாகலின், இஃது அருள்ஞானம், சிவஞானம், பதிஞானம், திருவடிஞானம் எனும் பெயர்களால் வழங்கப்படும்.[8]

*பரஞானம், அபரஞானம்*

ஞானம் இரண்டு வகைப்படும். அவையே பரஞானம், அபரஞானம் என்பன ஆகும்.

"... மருவியிடும் உயர்ஞானம் இரண்டாம் மாறா
மலமகல அகலாத மன்னு போதத்
திருவருளொன்று ஒன்று அதனைத் தெளியஓதும்
சிவாகமமென்று உலகறியச் செப்பு நூலே"[9]

என்கிறது சிவப்பிரகாசம்.

அபரஞானம் என்பது ஒருவர்க்குக் கல்வி கேள்விகளால் ஆகிய செயற்கை அறிவுக்குக் காரணமாகிய மதிநுட்பம் என்னும் இயற்கை அறிவாகும். இஞ்ஞானம் மறையாகம நூல்களின் வாயிலாக உண்டாவது. இதனை 'ஆராய்ச்சி ஞானம்' என்றும் 'கலைஞானம்' என்றும் கூறுவர்.

பரஞானம் என்பது இயங்குதிணையும், நிலைத்திணையுமாகிய உலகப்பொருள்களின் கற்பனைகளைப் போக்கி, அவை நிலம் முதலான முப்பத்தாறு தத்துவங்களின் தொகுதியென அறிதலாகும். அவற்றைத் தத்தம் காரணங்களுள் ஒடுக்கிக் கொண்டு சென்று முடிவில் காரண காரியமிரண்டுமின்றி நிற்பதாகிய பரம்பொருளை உணர்தற்கும் உரிய கருவியாகும்.[10] இஞ்ஞானம் 'அநுபவ ஞானம்' என்றும் 'அநுபூதி ஞானம்' என்றும் கூறப்படும்.

இவ்விரண்டு ஞானமும் அழிவில்லாத இன்பமெய்தும் ஆர்வமுடைய உயிர்கட்கு இன்றியமையாதனவாம். நூலறிவாகிய அபரஞானத்தால் வீடுபேற்றினை அடைய முடியாது. இக்கருத்தில்,

"கற்றாரை யான் வேண்டேன்"[11]

என்று மாணிக்கவாசகர் கூறுகிறார்.

காரைக்கால் அம்மையாரும், "நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக"[12] - என்று அற்புதத் திருவந்தாதியில் கூறியிருக்கிறார். எனினும் இந்த அபரஞானமே பரஞானத்திற்கு வாயிலாகத் திகழ்கிறது.

### ஞானமே வீடுபேற்றிற்குச் சாதனம்

மனித வாழ்வின் மேலான நோக்கம் 'வீடுபேறு' பெறுவதுவே. பாசத்தை விட வேண்டும். சிவத்தைப் பெறவேண்டும் என்பது இதன் விளக்கம். இதனையே வீட்டின்பம், மோட்சம், முத்தி என்ற பெயர்களால் கூறுவர். இம்முத்தி நிலையில் ஆன்மா நுகர்வது இறைவனது இன்பமாகிய சிவானந்தமே.

"உள்ள மலநீங்கி யோங்கு சிவானந்த
வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே--கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத் தேறு."[13]

என்று ஸ்ரீ குருஞானசம்பந்தர் கூறுகிறார். முதல்வன் திருவடி எனப்படும் திருவருளை உணர்ந்து, அதன்கீழ் அடங்கி நிற்றலே அடிசேர் முத்தி எனப்படும் பரமுத்தி நிலையாகும். சிவானந்தம் சிவனது அருட்குணம் ஆதலின், அதனை அவன் திருவடி நிழலை அடைந்து பெறுவதாகச் சித்தாந்த நூல்கள் கூறுகின்றன. எனவே சிவபெருமானது திருவடி இன்பமே சித்தாந்தம் கூறும் முத்தி இன்பமாகும். இவ்வீட்டின்ப முத்தி நிலையில் ஆன்மா எல்லையற்ற இன்பத்தை அனுபவிக்கும். இத்தகைய வீடுபேற்றிற்கு நேர் சாதனமாய் இருப்பது ஞானமே ஆகும்.

"ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்ல ஆகமஞ் சொல்ல. --------"[14]

என்று சித்தியாரும்,

"ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை -------"[15]
"ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம் ----"[16]

என்று திருமந்திரமும் கூறியுள்ளமை இதனை வலியுறுத்தும். வீட்டு நெறியாகிய ஞானமே மீண்டும இப்பிறப்பின்கண் வாராமையைப் பயப்பதாகும் என்பதை,

"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி"[17],

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு"[18]

என்ற குறட்பாக்கள் மூலம் எடுத்துக்காட்டுகிறார் திருவள்ளுவர். எல்லா நன்மைகளுள்ளும் சிறந்ததான வீடுபேற்றை எய்துதற்குரிய சிறந்த, நெறி நன்னெறியாகிய (சன்மார்க்கம்) ஞானமே ஆகும்.

"------- நன்னெறியாகிய ஞானத்தைக்
காட்டியல்லது மோட்சத்தைக் கொடா ஆகலான்"[19]

என்கிறது சிவஞானபோதம்.

வீடுபேற்றை விரும்பி பல்வேறு சமயநெறிகளில் ஒழுகினயாவரும் படிமுறையே அறிவு முதிரப் பெற்று, வளர்ந்து, சைவமாம் சமயத்தைச் சார்வர். அதன் பின்னர் ஞானாசிரியர் வழிகாட்டத் தீக்கை ஏற்றுச் சரியை முதலிய மூன்று நெறிகளிலும் நின்று இறுதியில் ஞானநெறியைப் பின்பற்றியே வீடுபேறு அடைவர்

இதற்குச் சிவஞானமுனிவர், "தென் தமிழ் நாட்டிலிருந்து வடக்கே மிகு தொலைவில், உள்ள மேருமலையைச் சென்று அடைய விரும்பிய ஒருவன் பல நாடுகளைக் கடந்து வழி கேட்டுக் கொண்டு இறுதியில் இளாவிருத நாட்டில் சென்று அடைவான். அங்கிருந்து செல்லும் வழி அவனை நேரே மேருமலைக்கு இட்டுச் செல்லும். அவ்வாறே எந்த திசையிலிருந்து செல்வோரும் இளாவிருத நாட்டைச் சென்றடைந்தே மேருவை அடைதல் கூடும். அதுபோல வீடுபேற்றை விரும்பி பல்வேறு சமயநெறிகளில் ஒழுகின யாவரும் படி முறையே வளர்ந்து சைவமாம் சமயம் சார்வர். அதன்பின் ஞானாசிரியன் வழிகாட்டத் தீக்கை ஏற்றுச் சரியை முதலிய நெறிகளில் நின்று இறுதியில் ஞானநெறியைப் பின்பற்றி வீடுபேறு அடைவர்" என்று அழகாக விளக்கம் அளிக்கின்றார். [20] இதனையே,

"புறச் சமய நெறி நின்றும், அகச்சமயம் புக்கும்
புகல்மிருதி வழிஉழன்றும், புகலும் ஆச்சிரம
அறத்துறைகள் அவை அடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும்
அருங்கலைகள் பலதெரிந்தும் ஆரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும், வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்தும் சென்றால், சைவத்
திறத்தடைவர், இதிற் சரியை கிரியாயோகம்
செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்"[21]

என்ற சித்தியார் பாடலும் எடுத்துக் கூறுகிறது.

சிவஞானபோதம் சாதன இயலில் எட்டாம் சூத்திரம் ஞானத்தை உணரும் முறை என்றதனால் ஞானமே ஆன்ம லாபமாகிய பயனை அடைவதற்குச் சிறந்த சாதனம் என்பது தெளிவாகின்றது.

ஒன்றற்கொன்று ஏற்றமாகிய கன்ம வேள்வி, தவ வேள்வி, செப வேள்வி, தியான வேள்வி, ஞானவேள்வி என்னும் ஐந்தனுள், முன்னைய நான்கும் போகத்தை ஊட்டுவனவாக அமைகின்றன. ஞானநூல்தனை ஓதல், ஓதுவித்தல், நற்பொருளைக் கேட்பித்தல், தான் கேட்டல், ஈனமில்லா அப்பொருள்தனைச் சிந்தித்தல் ஆகிய வகையுடைய ஞானவேள்வியே வீடுபேற்றைத் தருவதாகும்.[22]

## அடிகுறிப்புகள்

1. திருக்குறள், 353
2 வேங்கடராமையா.கா.ம. (ப.ஆ). திருக்குறள் மூலமும பரிப்பெருமாள் உரையும், ப.108.
3. ................. , ப.107.
4. ........................ , ப 109.
5. சைவ கோபாலகிருஷ்ணமாச்சாரியார் (ப.ஆ.) திருக்குறள, பரிமேலழகர் உரை, 1949, ப. உஙஉ.
6. திருக்குறள், 370
7. சித்தியார், சூத்.8: பா.27
8. வச்சிரவேல் முதலியார். க., திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே, ப.
9. சிவப்பிரகாசம், பா.10.
10. பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார், "ஞானத்தின் திருவுரு", கரந்தைக் கட்டுரை, வெள்ளிவிழா நினைவுமலர், கரந்தைத் தமிழ்ச்சங்கம், தஞ்சாவூர், 1983. ப.சஉ
11 திருவாசம், திருப்புலம்பல், 3.
12. அற்புதத் திருவந்தாதி, 33
13. குருசாமி தேசிகர், "முத்தி நிச்சய பேருரை", proceedings of second international saiva siddhanta seminar/ malaysia - 1986, ப.188.
14. சித்தியார், சூத்.8: பா.27.
15. திருமந்திரம், தந்திரம் 5: 1467
16. ............................................. 5: 1467
17. திருக்குறள், 356
18. ........... ... ..., 358
19. சிவஞானபோதம், சூத்.8: அத்.1.
20. மணி சி.க., சிவஞான மாபாடியம்-உரை, ப.894.
21. சித்தியார், சூத் 8: பா.11.
22. ... ... . . . ., சூத்.8: பா.23.

*இயல் மூன்று*

# ஞானத்தைப் பெறும் வழிகள்

**ஞானத்திற்குச் சாதனம் தவம்**

ஞானமே வீடுபேற்றிற்குச் சாதனமாகிய நிலையில் அந்த ஞானத்திற்குச் சாதனமாகத் திகழ்வது எது எனின் அதுவே முற்செய் தவம் ஆகும்.

"ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான்
ஞானம் நிகழும்"[1]

என்று சிவஞானபோதம் கூறுவதிலிருந்து, முன்னைப் பிறப்புக்கள் பலவற்றில் செய்து போந்த தவங்கள் பலவும் திரண்டு கூடிப் பயன் தரும் வழியே ஞானம் நிகழுமல்லாது இவ்வொரு பிறப்பில் செய்யும் தவத்தால் மட்டுமே ஞானம் நிகழமாட்டாது என்பது வலியுறுத்தப்பட்டது.

திருஞானசம்பந்தர் முதலிய நாயன்மார்களின் வரலாறுகளில் அவர்கள் தவம் செய்ததாகக் குறிப்பிடப்படவில்லை. எனினும் ஞானசம்பந்தர் மூவாண்டில் சிவஞானம் பெற்று உயர்ந்தார் என்றால் அதற்கு காரணம் அவரது முன்னைத் தவமே யாகும்.

இதனைச் சேக்கிழாரும்,

"உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம் உணர்ந்தார் அந்நிலையில்---"[2]

என்று அவருடைய முற்செய் தவத்தினை மறவாது குறிப்பிடுகின்றார்.

முற்செய் தவத்தான் ஞானம் பெற்று ஆறே நாட்களில் முத்தியும் பெற்ற கண்ணப்ப நாயனார் ஒருவேடர். அவர் இப்பிறவியில் எந்த கலையையும் பயின்றாரில்லை எனினும் அவர் முற்பிறவிகளில் ஈட்டிய கலைஞானத்தின் மிகுதியை உணர்ந்தே

"கலைமலிந்த சீர் நம்பி கண்ணப்பர்க் கடியேன்"[3]

என்கின்றார் சுந்தரர்.

இத்தகுச் சிறப்புடைய தவம் என்பது யாது? சிவபெருமானை நோக்கிச் செய்யும் சரியை, கிரியை, யோகம் ஆகிய வழிபாடும், தொண்டுமே சைவத்தில் 'தவம்' என்று சிறப்பித்துக் கூறப்படுகிறது. வீட்டைத் துறந்து காட்டிற்குச் சென்று உணவை வெறுத்தும் உடலை

ஒறுத்தும் செய்யும் தவங்களும் சிவபிரானை உணராதவிடத்துத் தவங்களல்ல; வீட்டில் மனைவி மக்களோடு கூடி இருந்து மனையறம் நடத்தினாலும், சிவபிரானையேநினைந்து சரியை முதலிய வழிபாடுகளை செய்வதே உண்மையான தவம் என்பது சைவசமயத்தின் முடிந்த கொள்கையாகும்.

"மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி,
நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி ------ "[4]

என்கிறது சிவஞானபோதம்.

இதனைக் குமரகுருபரரும்,

"விரத முதலாய பல மெய்த் தவத்தின் உண்மைச்
சரியை கிரியா யோகம் சார்வித்து -- அருள்பெருகு
சாலோக சாமீப சாரூபமும் புசிப்பித்து"[5]

என்று கந்தர் கலிவெண்பாவில் கூறுகிறார்.

இச்சரியை முதலாய தவங்களைச் செய்தவர் தவ உலகங்களுக்குச் சென்று அவற்றின்பயனாகிய சாலோகம், சாமீபம், சாரூபம் என்னும் தவஉலகப் பதவிகளை அடைந்து இன்பங்களை நுகர்வர். தவத்தின் பயனை நுகர்ந்து கழித்த பின் மீண்டும் இவ்வுலகில் நல்ல குடியில், சரியை, கிரியை, யோகங்களைச் செய்வதற்குரிய நல்ல சூழலில் வந்து பிறந்து, உலக பற்றை அறுத்து ஞானத்தைப் பெறுவர் என்று மெய்ந் நூல்களைக் கற்ற பெரியோர் சொல்லுவர் என்பதை,

"தவம் செய்தார் என்றும் தவலோகம் சார்ந்து
பவம் செய்து பற்றறுப்பா ராகத் -- தவம்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றார்சூழ் சொல்லுமாம் கண்டு"[6]

என்ற வெண்பாவில் எடுத்துக்காட்டுகிறார் மெய்கண்டார்.

மேலும், வேதத்தில் விதிக்கப்பட்ட வேள்வி முதலிய செயல்களால் ஞானம் உண்டாகாதா எனின் அவைத் தவமேயாகா. அவற்றால் ஞானம் உண்டாகாது. அத்தகைய நல்வினைகளைச் செய்வதால் உண்டாகும் இன்பம் நிலையில்லாதது. பசித்தவன் உணவை உட்கொண்டு சிறிது பொழுது கழித்து மீண்டும் பழையபடி பசித்துன்பம் அடைவதைப் போன்றதே என்றும், சரியை முதலான நிலையான இறப்பில் தவமே ஞானத்தை நல்கும் என்றும்

"பசித்து உண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்
இசைத்து வருவினையில் இன்பம் - இசைத்த
இருவினை யொப்பில் இறப்பில் தவத்தான்
மருவுவனாம் ஞானத்தை வந்து"[7]

என்று வெண்பா மூலம் விளக்குகிறார் மெய்கண்டார்.

ஏன் சரியை முதலானவற்றை இறப்பில் தவம் என்கிறார் எனின் வேத நூல்கூறும் புண்ணியங்கள் யாவும் உயிர்களை நோக்கி இயற்றப்படுவதனால் பசுபுண்ணியம் எனப் பெயர் பெறும். ஆனால் சரியை, கிரியை, யோகங்களாகிய தவங்கள் தேவருல அமிழ்தம் போன்றவை. அவ்வமிழ்தம் தன்னை உண்டார்க்கு பசியை நீக்குவதோடு நரை, திரை, மூப்பு, பிணியின்றி வாழுகின்ற முதன்மைப் பயனையும் தருவது போன்று, இத்தவங்கள் சாலோகம் முதலான பத முத்திகள் என்னும் தவப்பயன்களைத் தருவதோடு அழிவற்ற ஞானமாகிய முதன்மைப் பயனையும் தந்து நிலைபேறுடைய பேரின்ப வீட்டிற் செலுத்தும் என்பதால் இத்தவங்களை இறப்பில் தவம் என்றார்[8].

இத்தவங்கள் யாவும் வீடுபேற்றை விரும்பி சிவபெருமானை நோக்கி இயற்றப்படுதலின் சிவ புண்ணியம் எனப்பட்டன.

### *சிவ தீக்கை*

இத்தகைய சைவ நெறியின் ஒழுகுவதற்கு, சைவக் குடும்பத்திலே பிறந்தவராயினும் சிவதீக்கை பெறவேண்டியது இன்றியமையாத ஒன்றாக சைவத்தில் கூறப்படுகிறது. தீக்கை என்பது ஞானாசிரியர், மாணாக்கனின் பாசத்தைக் கெடுத்து மெய்யுணர்வை உண்டு பண்ணுவதேயாகும்.

தீக்கை, சாதாரம், நிராதாரம் என இரு வகைப்படும். இவ்விரண்டையும் உயிர்களின் பக்குவத்திற்கு ஏற்ப சிவபெருமானே செய்தருளுகிறார். நிராதார தீக்கை என்பது ஆதாரமாகிய திருமேனி இல்லாமல் நேரடியாகச் செய்யப்படுவது. சாதாரம் என்பது இறைவன் திருமேனி தாங்கிச் செய்கின்ற தீக்கையாகும். நிராதாரத் தீக்கை ஒரு மலமுடைய விஞ்ஞானகலர்க்கும், இரு மலமடைய பிரளயாகலர்க்கும் தீவிரதரம், தீவிரம் என்னும் இருவகைச் சத்திநிபாதத்தால் இறைவனே செய்கின்ற தீக்கையாகும். இது மேலும் இருவகையாகப் பிரிக்கப்படும். ஒன்று தீவிர சத்திநிபாதம் அநந்த தேவர் முதலியப் பதங்களை

உதவுவது. மற்றொன்று தீவிரதர சத்திநிபாதத்தால் பதமுத்திகளை விட உயர்ந்த பரமுத்தி எனப்படும் வீடுபேற்றை அருளுவது.

சாதார தீக்கை என்பது மும்மலங்களை உடைய சகலருக்கு இவ்வுலகத்தில் தோன்றிய ஒரு ஞானாசிரியரை இடங்கொண்டு நின்று இறைவன் செய்யும் தீக்கையாகும். இத்தீக்கை மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்னும் நான்குவகைப் பக்குவ நிலைக்கு ஏற்பச் செய்யப்படுவது. இது திருநோக்கம் முதல் பல வகைப்படும்.

இத்தீக்கை பெற்ற அளவிலேயெ சிவப்பேறு கிடைக்கும் என்பது பொருந்துமா எனின் பொருந்தாது. இத்தீக்கையும் ஞானத்திற்கு ஒரு சாதனமாகவே திகழும்.[9]

பிறக்கும் பொழுதே குருடனாகப் பிறந்த ஒருவனது விழியை மறைத்திருந்த படலத்தை சிறந்த மருத்துவன் ஒருவன் நீக்கி கண்பார்வையைப் பெறச் செய்தாலும் இவை இன்னின்ன என்று கற்பித்த பிறகே புதிதாய் பார்வை பெற்றவன் பொருள்களை அறியும் அறிவைப் பெறுவான்.

எனவே தீக்கை என்பது கண்ணின் படலத்தை நீக்கி கண்பார்வையை பெறச் செய்வது போன்றதே. ஞானம் தான் பொருள்களை விளங்கச் செய்யும் அறிவாகும். இந்த ஞானமே வீடுபேற்றைத் தரும். தீக்கை பெற்ற அளவிலேயே வீடுபேறு கிடைக்கும் என்பது பொருந்தாது.

"வீடு பேற்றிற்குத் தீக்கை மாத்திரமே அமையும்; ஐவகை வேள்வி முதலிய கன்மங்களே அமையும் என்று பிதற்றுவோர் பேதைகள்" என்று மாதவ சிவஞான முனிவர் சித்தியாருக்கு கூறிய விளக்கவுரையில் குறிப்பிடுகின்றார். [10]

### தவத்தின் வகைகள்

சைவ சமயத்தில் இறைவனை அடைவதற்கு நேர் சாதனமாக ஞானத்திற்குச் சாதனமாக அமைந்த வழிபாட்டு நெறிகளே 'தவம்' என்ற சிறப்புச் சொல்லால் குறிக்கப்படும். அவை சரியை, கிரியை, யோகம் என்பனவையாகும்.

இவ் வழிபாட்டு நெறிகள் பயனாகிய ஞானத்தையும் சேர்த்து நால்வகை நெறிகளாகச் சொல்லப்படும். இவை நான்கும் ஒன்றிலிருந்து ஒன்று வேறுபட்டதன்று. ஒன்றின் படிநிலை வளர்ச்சியே மற்றொன்றாகும்.

"விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்

அரும்பு மலர் காய் கனி போலன்றோ பராபரமே"[11]

என்ற தாயுமானவர் பாடல் இதன் படிநிலை வளர்ச்சியைச் சிறப்பாக எடுத்துக் கூறுகிறது.

*சரியை*

சிவபெருமான் எல்லையற்று, என்றும் நிலைபெற்று, எங்கும் நிறைந்திருக்கின்ற, மாற்றமில்லாத, உண்மை அறிவுப் பிழம்பாக விளங்குபவன். ஆயினும். உயிர்கள் தன்னை உணர்ந்து வழிபட்டு உய்யும் பொருட்டு உருவம், அருவுருவம், அருவம் என்று மூவகைத் திருமேனிகளை உயிர்களின் பக்குவ நிலைகளுக்கேற்ப எடுப்பதுண்டு. அவனுடைய உருவத் திருமேனியை நினைத்துப் புறத்தே செய்கின்ற வழிபாடு 'சரியைநெறி' எனப்படும்.

திருக்கோவிலைத் திருவலகிடுதல், மெழுககுமிடுதல், நந்தவனம் அமைத்தல், பூப்பறித்தல், பூமாலை கட்டுதல், தூபதீபம காடடல, பூசைக்கு வேண்டிய பொருட்களைச் சேகரித்துக் கொடுத்தல், துதிப்பாடல்கள் பாடுதல், சிவனடியார்க்குப் பணிவிடை செய்தல முதலியன சரியைத் தொண்டுகளாகும்.

"நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்குமிட்டு
பூமாலை புனைந்தேத்தி புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடி
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனற் சேர் செஞ்சடை எம் ஆதியென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே"[12]

என்று திருநாவுக்கரசர் தேவாரம் இச்சரியை நெறியை சிறப்பாக எடுத்துக் கூறுகிறது.

புறத்தொழில் அளவில் செய்யும் வழிபாடுகள் ஆதலால் இது 'புறவழிபாடு' என்றும், இறைவனுடைய உருவத் திருமேனியை நினைத்துச் செய்யும் வழிபாடு ஆதலால் 'உருவ வழிபாடு' என்றும கூறப்படும். சத்திநிபாதம் மெல்ல நிகழ்வதாகிய மந்ததரம் (அரும்பு)

என்னும் பக்குவ நிலையில் உள்ள ஆன்மாக்கள் இச்சரியை தொண்டினைச் செய்வர்.

சரியை நெறியினுடைய பலன் 'சாலோகம்' எனப்படும் அதாவது இறைவன் இருக்கும் உலகத்தினை அடைந்து தடையின்றி எங்கும் செல்லும் உரிமை பெற்று அங்குள்ள போகங்களை நுகர்தலாகும். சரியையாளர், ஒருவர் வீட்டில் பணி செய்யும் அகத் தொண்டர்க்கு உள்ள அன்பும், உரிமையும் போன்று இறைவனிடத்து அன்பும் உரிமையும் உடையவராய் ஒழுகுதல் பற்றி இந்நெறி 'தொண்டு நெறி' (தாசமார்க்கம்) எனப்படுகிறது. இத்தொண்டு நெறியை,

"என் கடன் பணி செய்து கிடப்பதே"[13]

என்று சிறப்பிக்கிறது திருநாவுக்கரசர் தேவாரம்.

*கிரியை*

சரியை நெறியிலே நின்றவர்களுக்குப் பக்குவ முதிர்ச்சியால் நுண்ணுணர்வு தோன்றும். சத்திநிபாதம் மந்தமாய் நிகழ்வதாகிய மலர் என்னும் பக்குவ நிலையில், ஆணவ மலம் மேலும் பரிபாக முற்று, இறைத் தொண்டில் மேலும் விருப்பம் உண்டாகும்.

சிவபெருமானது அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கத்தின் சிறப்பையுணர்ந்து அப்பெருமானை மனம், மொழி, மெய் என்னும் மூன்றினாலும் அகத்திலும் புறத்திலும் வழிபடுதல் கிரியை எனப்படும் இது 'அகப்புற வழிபாடு' என்றும் சொல்லப்படும்.

அதாவது புதிய மலர்கள், தூபம், தீபம், திருமஞ்சனம், திருவமுது முதலிய பூசைப் பொருள்களைத் திரட்டிக் கொண்டு, இலிங்கமூர்த்தியை எழுந்தருள்வித்து, பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, லிங்கசுத்தி என்ற பஞ்ச சுத்திகளும் செய்து, தியானித்து, மந்திரத்தை உச்சரித்து சிவபூசை செய்வதே 'கிரியை' என்னும் 'அருவுருவ வழிபாடு' ஆகும்.

"நறை மலி தரு மலரொடு முறை நகு மலர் புகை மிகு வளரொளி
நிறை புனல் கொடு தனை நினைவொடு நியதமும் வழிபடு மடியவர்
குறை வில பதமணை தரவருள் குணமுடை யிறையுறை வனபதி
சிறை புனலமர் சிவபுரமது நினைபவர் செயமகள் தலைவரே"[14]

- என்ற ஞானசம்பந்தர் பாடல் இதை வலியுறுத்துகிறது.

இந்நெறியின் பயன் 'சாமீபம்' ஆகும். அதாவது இறைவன் இருக்கும் உலகத்தினை அடைந்து பணியாளர் போல அகல நில்லாது, மைந்தர் போல அங்குள்ள புவன பதிகளாகிய தலைவர்களோடு அருகில் இருக்கும் உரிமையைப் பெறுதல். இது பற்றியே இப்பயனைத் தரும் கிரியை நெறி 'நன்மகன்மை நெறி', 'சத்புத்திரமார்க்கம்' என்று கூறப்படுகிறது.

**யோகம்**

யோகம் என்ற சொல்லுக்கு 'ஒன்றுதல்' என்று பொருள். கிரியை நெறியிலே நின்றவர்களுக்கு பக்குவ முதிர்ச்சியால், ஆணவமலம் மேலும் பரிபாகமுறும். சத்திநிபாதம் தீவிரமாய் நிகழும் 'காய்' என்னும் இப்பக்குவ நிலையில், இறைவனது அருவத் திருமேனியை உணர்ந்து அகத்தால் மட்டும் வழிபடுவர். இதனை 'அருவ வழிபாடு' என்றும் அகவழிபாடு என்றும் கூறுவர்.

புறத்தே பரந்து செல்லும் மனத்தை அவ்வாறு செல்லாதவாறு அடக்கி அகத்தே நிறுத்தி ஒளிவடிவமாக இறைவனோடு ஒன்றுதலே 'யோக வழிபாடு' ஆகும். இவ்வழிபாடு எட்டு படிநிலைகளை அங்கமாகக் கொண்டது.

1. இயமம் : ஞான நூல்களில் நன்மக்கட்கு ஆகாதன என விலக்கப்பட்ட தீயச் செயல்களை விலக்குதல்.

2. நியமம் : அந்நூல்களில் விதிக்கப்பட்ட அறச் செயல்களை - நற்செயல்களை மேற்கொள்ளுதல்.

3. ஆசனம் : பத்மம், கூர்மம், மச்சம் போன்ற பெயர்களைக் கொண்ட ஆசன வகைகளில் பயிற்சி செய்து உடம்பை நெறிபடுத்துதல்.

4. பிராணாயாமம் : இயற்கையாக இயங்கும் மூச்சுக் காற்றைத் தன் வசப்படுத்தி ஒரு நெறியில் இயங்கச் செய்தல்.

5. பிரத்தியாகாரம் : ஐம்பொறிகளையும் அவற்றின் வழியிலேயே செல்லவிடாது ஒரு நெறியிலே அடக்குதல்.

6. தாரணை : மனத்தை அடக்கிக் குறித்த பொருளில் நிறுத்துதல்.

7. தியானம்: இறைவனது அருவத் திருமேனியையே நினைந்து இடைவிடாது அதையே சிந்தித்தல்.

8 சமாதி தான் என்னும் முனைப்பு ஒடுங்கி தன்னையும் உலகத்தையும மறநது நிற்கும் ஒன்றிய நிலை.

இந்நிலையில் ஆன்மா ஞானத்தைப் பெற்று இறைவனது அறிவுமயமான தன்மையை உணரும்.

தியானிக்கும் பொழுது சிவபெருமானையே நினைத்து தியானிப்பதால் 'சிவயோகம்' எனப்படுகிறது. இந்நெறியின் பயன் 'சாரூபம்' ஆகும். இறைவனது உலகத்தில் தோழர் போல அப்புவன பதிகளோடு ஒத்த உருவம், பெயர் முதலியன பெற்று அளவளாவியிருக்கும் உரிமையை உடையவராதல். இது பற்றியே இந்நெறி 'தோழமை நெறி' (சக மார்க்கம்) என்று கூறப்படுகிறது

"இறைவன் சுந்தரரிடம் தோழமையாக நம்மை உமக்குத தந்தனம்"[15] என்று கூறியதாக சேக்கிழார் கூறுவது இந்நெறியைச சிறப்பித்துக் கூறுகிறது.

மேலும்,

"ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் --------------------"[16]

- என்று சுந்தரர் குறிப்பிடுவதும் இந்நெறியின் சிறப்பைக் கூறுகின்றது

இவ்வாறு சரியை, கிரியா யோகங்களாகியத் தவங்களைச செய்தோர் இடைநிலைப்பயனாக அடைவது 'பதமுத்தி' எனப்படும இவையே பரமுத்தியை அடைவதற்குச் சாதனமான ஞானத்தைப பெறுவதற்குச் சாதனமாக அமைந்தவையாகும்.

இதனைச் சித்தியார்,

"சன் மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கம்
தாதமார்க்க மென்றுஞ் சங்கரனை யடையும்
நன்மார்க்க நாலவைதாம் ஞான யோக
நற்கிரியை சரியையென நவிற்றுவதுஞ் செய்வர்

சன்மார்க்க முத்திகள் சாலோக்கிய சாமீப்பிய
சாரூப்பிய சாயுச்சிய மென்று சதுர் விதமாம்
முன்மார்க்க ஞானத்தா லெய்து முத்தி
முடிவென்பர், மூன்றினுக்கு முத்திபத மென்பர்."[17]

- என்று விரித்துரைக்கிறது.

சரியை முதலியன உபாயம், உண்மை என இரு வகைப் படும். புகழ் முதலிய உலகப் பயனை நோக்கிச் செய்யும் சிவ புண்ணியங்கள் உபாய சரியை என்பனவாம். பக்தி காரணமாகச் செய்யும் சிவ புண்ணியங்கள் உண்மை சரியை என்பனவாம். உபாயச் சரியை, உண்மைச் சரியை இரண்டும் சரியையிற் சரியை கிரியை, யோகம், ஞானம், கிரியையிற் சரியை, கிரியை, யோகம், ஞானம், யோகத்திற் சரியை, கிரியை, யோகம், ஞானம், ஞானத்திற் சரியை, கிரியை, யோகம், ஞானம் என ஒன்றோடொன்று நன்னான்காய் முப்பத்திரண்டு வகைப்படும்.

இவற்றுள் ஞானத்தில் ஞானம் நீங்கிய சிவ புண்ணியங்களுக்குப் பயன் சாலோக, சாமீப, சாரூப மென்னும் பத முத்தியாகும், ஞானத்தில் ஞானத்துப் பயன் சாயுச்சியமாகிய பரமுத்தியாகும். பத முத்தி அடைந்தாரும் முன்னிற்கும் பொழுது இவ்வுலக பற்றில்லாதிருப்பின் சாலோகாதி பதங்களிலிருந்தவாறே ஞானத்தைப் பொருந்தி வீடுபேற்றை அடைவர்.[18]

## தவத்தின் பயனாக உயிரறிவில் நிகழும் பக்குவ நிலைகள்

உயிர்கள் மேற்கூறிய தவங்களை மேற்கொள்ளுவதற்குக் காரணமாயிருப்பது இறைவனது திருவருட்சத்தியேயாகும். உயிர்களின் பக்குவத்திற்கேற்ப இத்திருவருள் கைகூடும்.

ஆன்மாக்களுக்கு அறிவு விளங்கும் போது படிப்படியாகவே விளங்கும். பேரறிவுடைய இறைவன் தன் தன்மையில் பிறழ்தல் இல்லாமல் உணர்த்தினாலும் உயிர்கள் அவன் அறிவை அறியும் வல்லமை உடையன அல்ல. அவனுடைய பேரறிவு நுட்பமானது. அதை உணரும் வண்ணம் உயிரினது சிற்றறிவைப் படி முறையில் நுட்பம் அடையச் செய்வது இத்திருவருட்சத்தியேயாகும்.

உயிர்களை அறியாமையில் உழலச் செய்த இறைவனின் மறைப்பாற்றலாகிய திரோதான சத்தியே பின்னர் அவற்றிற்கு அறிவை நிகழ்விக்கும். வளர்பிறை நிலவு சிறிது சிறிதாக விளங்கி முழுநிலா ஆவது போன்று ஆன்மாக்களின் அறிவும் படிப்படியாக வளர்ந்து முழுமை பெறும். அதே சமயம், உயிரின் அறிவை மறைத்து நின்ற ஆணவ மலத்தின் சத்தியும் வளர்பிறைக் காலத்து இருளைப் போன்று சிறிது சிறிதாகத் தேய்ந்து தேய்ந்து முடிவில் இல்லாது ஒழியும்.[19]

மலசக்தி தேய்ந்து வரும் நிலையை மலபரிபாகம் என்றும், அருட்சக்தி விளங்கிவரும் நிலையைச் சத்திநிபாதம் என்றும் கூறுவர். இவ்விரண்டும் ஒரே நேரத்திலே நிகழுகின்ற உடன் நிகழ்ச்சிகளாகும். இதுவே பக்குவமடைதல் எனப்படும். இந்நிலையில் ஆன்மாக்களுக்கு உலகியல் இன்பத்தில் வெறுப்பும் வீடு பேற்றில் ஆவலும் உண்டாகும் சிவபெருமானது முதன்மையைச் சிறிதளவேனும் உணர்ந்து, அப்பெருமானுக்குப் பணி செய்தல் வேண்டும் என்னும் விருப்பம் முதலில் உண்டாவதே சத்திநிபாத தொடக்கத்தின் அறிகுறியாகும். இதனையே "தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி"[20] என்கிறார் மாணிக்கவாசகர்.

சத்திநிபாதம் என்பது சத்தியினது வீழ்ச்சி என்று பொருள்படும். உயிர்களோடு எப்பொழுதும் உடனாகவே ஆனால் உணரப்படாது இருந்த அருட்சத்தி அவ்வுயிர்களால் உணரப்படும் பொழுது அதன் தாக்கம் ஒரு விளைவை ஏற்படுத்தும். இதனைச் சிவஞான முனிவர்,

"பலர் கூடியிருக்கும் கூட்டத்தின் நடுவிலே ஒரு கல் வந்து விழுந்தால் அது கூடியிருந்தவர்களை அக்கூட்டத்திலிருந்து வேகமாக அகன்று போகச் செய்யும். அவ்வாறே சத்திநிபாதம் நிகழ்ந்தபோது ஆன்மாவை மனைவி மக்கள் முதலிய உலக ஆரவாரத்திலிருந்து அஞ்சி ஓடச் செய்யும். ஞான ஆசிரியரை நாடச் செய்யும்".[21]
- என்ற உவமையின் மூலம் விளக்குகிறார்.

இச்சத்திநிபாதம் பொதுவாகப் படிமுறையில் நான்கு வகையாக நிகழும். அவை மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்பனவாகும். தொடக்கத்தில் சத்திநிபாதம் மிகச் சிறிதளவே நிகழும். அதுவே மந்ததரம் எனப்படும். உயிரின் அறிவைப் பிணித்திருக்கும் ஆணவ மலத்தின் ஆற்றலை மெலிவித்தற் பொருட்டே இறைவன் திரோதான சத்தியால் அதனைச் செயல்படச் செய்கிறான். சடப் பொருளான ஆணவமலம் தொழிற்படத் தொழிற்படத் தேய்ந்து மெலிதல் இயல்பே. பின்பு உயிர்களின் உண்மைத் தவத்திற்கேற்ப சத்திநிபாதம் மேலும் சிறிது விளங்கி நிகழும். அதுவே மந்தம் என்ற வகையாகும். பின்பு தீவிரமாய் நிகழும். கடைசியில் முற்ற விளங்கி தீவிரதரமாய் முடியும். இந்நிலையிலேயே இறைவனது திரோதான சத்தி சிறிது சிறிதாகத் தன் தன்மை மாறி, அருள் புரியும் அருட்சக்தியாக உயிரின்கண் விளங்கித் தோன்றும். இந்நிலையே உயிர்கள் ஞானத்தைப் பெறக் கூடிய பக்குவத்தை- தகுதியை அடைந்துள்ளது என்பதைக் குறிக்கிறது.

## இருவினை ஒப்பு

மேற்கூறியச் சரியை, கிரியை, யோகம் ஆகிய தவத்தினைப் பொருள், புகழ் முதலிய உலகப் பயன்களைக் கருதாது சிவபெருமானிடம் கொண்ட தூய அன்பு ஒன்றே காரணமாகச் செய்துவரின், அத்தவ முதிர்ச்சியால் 'இருவினை ஒப்பு' உண்டாகும். இருவினை ஒப்பு என்பது யாது? நல்வினையின் பயனாகிய இன்பத்தில் விருப்பும், தீவினையின் பயனாகிய துன்பத்தில் வெறுப்பும் கொள்ளாது, அவற்றால் உள்ளம் வேறுபடாது, இரண்டையும் ஒன்று போலக் கருதி நிற்கும் உணர்வே இருவினை ஒப்பு எனப்படும்.

அதாவது புண்ணியம், பாவம் என்ற இரண்டுமே முறையே பொன்விலங்கும், இரும்பு விலங்கும் போல மீண்டும் பிறப்பு இறப்புகளில் செலுத்தி இன்ப துன்பத்தை நுகரச் செய்யும் என்பதை உணர்ந்து இவை இரண்டையும் விரும்பாமல் உவர்த்து விடுதலே இருவினை ஒப்பாகும்.[22]

"வேண்டலும் வெறுத்தலும் ஆண்டொன்றிற் படரா
உள்ள மொன் றுடைமை வேண்டும்"[23]

- என்று திருவிடைமருதூர் மும்மணிக்கோவை கூறுகிறது.

இவ்வாறு இருவினைஒப்பு நிலையை அடைந்த பொழுதே உயிர் இறைவன் திருவருளைப் பெறுகின்ற பக்குவத்தை அடைகிறது இதனை,

"நீடும் இருவினைகள் நேராக நேராதல்
கூடும் இறைசத்தி கொளல்"[24]

- என்கிறது திருவருட்பயன். இதனை மாணிக்க வாசகரும்,

"பிணக்கிலாத பெருந்துறைப் பெரு மான்உன் நாமங்கள் பேசுவார்க்கு
இணக்கில்லாத தோர்இன்ப மேவருந் துன்பமே துடைத்தெம்பிரான்
உணக்கில்லாததோர் வித்து மேல்விளை யாமல் என்வினை ஒத்தபின்
கணக்கில்லாத் திருக்கோலம் நீவந்து காட்டினாய் கழுக்குன்றிலே" [25]

- என்று வினை ஒத்தபின் இறைக் காட்சியைக் காணலாம் என்பதை வலியுறுத்துகிறார்.

இதனையே குமரகுருபரரும்,

"விரதமுதலாய பல மெய்த்தவத்தின் உண்மைச்
சரியை கிரியா யோகம் சார்வித்து- அருள்பெருகு
சாலோக சாமீப சாரூபமும் புசிப்பித்து
ஆலோகந் தன்னை அகற்றுவித்து - நால்வகையாம்
சத்திநிபாதந் தருதற்கு இருவினையும்
ஒத்துவருங் காலம் உளவாகி - பெத்த
மலபரிபாகம் வருமளவில் பன்னாள்
அலமருதல் கண்ணுற்று அருளி ----"[26]

- என்று விளக்குகிறார்.

இத்தகைய பக்குவ நிலை உடனே எவருக்கும் வந்து விடாது என்பதையே "பன்னாள் அலமருதல் கண்ணுற்று அருளி" என்கிறார் உயிர்கள் பலப்பல பிறவிகளில் செய்த சிவப்புண்ணியத்தால் படிப்படியாகவே இத்தகைய பக்குவத்தைப் பெறுகின்றன. இதனையே மறைஞானசம்பந்தர் சைவசமயநேறி என்ற நூலில்,

"பல்லூழிக்காலம் பயின்று அரனை அர்ச்சிக்கில்
நல்லறிவு சற்றே நகும்"[27] என்கிறார்.

மலபரிபாக நிகழ்வும், சத்திநிபாத நிகழ்வும், சிவ புண்ணிய நிகழ்வும் ஆன்மாவின் அறிவிலேயே விளங்கும். இதனை நுண்ணுணர்வால் தான் கண்டு கொள்ள முடியும். இவை யாவும் ஞானம் நிகழ்வதற்கு மூல காரணங்களாக இருப்பவையாகும். இவ்வாறு பல்வேறுநிலைகளில் பக்குவ மடைந்த ஆன்மா இறுதியில் ஞானத்தை உணருகிறது

**குரு மூலமே ஞானம் வரும்.**

சரியை, கிரியை, யோகங்கள் ஆகிய தவத்தினால் ஆன்மா பக்குவமடைந்து ஞானத்தை உணர்வதற்குரிய பருவத்தை அடைகிறது அதாவது உணர்த்தியதை உணர்த்தியவாறே உணர்ந்து கொள்ளும் உணர்தல் திறன் உண்டாகும் அதனால் அவ்வுயிர்க்கு ஞானத்தைப் பெற வேண்டும என்பதில் ஒரு வேட்கை உண்டாகும். நீர் வேட்கை உள்ளவரே நீரை நாடுவா அதுபோல இந்த ஞான வேட்கை ஏற்பட்டவுடன் ஞானத்தை உயிர் நாடுகிறது

பக்குவம் உறாத பொழுது உயிர்க்குயிராய் உள்ளே மறைந்து நின்று அதன் அறிவை வளர்த்து வந்த சிவனே இப்பொழுது அவ்வுயிரின் பக்குவநிலையையும் ஞானத்தைப் பெறுவதில் உள்ள வேடகையையும் பார்த்தருளி, ஞானாசிரியராகத் தோன்றி

முப்பொருள்களின் இயல்பையும் அறிவுறுத்துவார் எனவே தவத்தினால் ஞானத்தை உணரத்தக்க பக்குவம் வாய்க்குமேயன்றி ஞானமே தானாக வந்து வாய்த்து விடாது. அப்பருவத்தில் ஞானாசிரியர் வந்து உணர்த்தவே ஞானம ஒருவர்க்குக் கிடைப்பதாகும

குருவின் திருவருளல்லாது ஞானத்தை அடைய முடியாதோ என வினவுவார்க்கு,

"ஞானம இவன் ஒழிய நண்ணியிடும் நற்கல் அனல
பானு ஒழியப் படின்."[28]

- என்று பதில் கூறுகிறார் உமாபதி சிவாச்சாரியார்.

அதாவது சூரியகாந்தக்கல் ஞாயிற்றின் கதிர்களை வாங்கி ஒருமுகப் படுத்தி நெருப்பைத் தோற்றுவிக்கும் தன்மை உடையது அக்கல்லுக்கு என வெம்மை கிடையாது சூரியன் இல்லாத போதும், சூரியகாந்தக்கல் வெப்பத்தை வெளியிட முடியுமானால், இறைவன் திருவருள் இல்லாமலே குருவின் உதவியில்லாமலே ஞானம் கிடைத்தல் கூடும் என்று எதிர்மறை உவமையால், ஞானாசிரியன் அல்லாது ஒருவருக்கும் ஞானம் விளைதல் இல்லை என்பது வலியுறுத்தப்படுகிறது.

கடல்நீரானது ஒருவனது தாகத்தைத் தணிக்கப் பயனபடாது சூரிய வெப்பத்தால் ஆவியாகி மேகத்தை அடைந்து மழையாகப் பொழிந்தால் அந்நீரே தாகத்தைத் தணிக்கும் அதுபோல சாத்திர நூலை ஒருவன் தானாக கற்பின் தெளிவு உண்டாகாது, தகுந்த ஞானாசிரியர் மூலம் அவர் உணர்த்த உணரும் பொழுதே தெளிவு பிறக்கும் என்று,

"சாததிரத்தை ஒதினர்க்குச் சற்குருவின் தன்வசன
மாத்திரத்தே வாய்க்குநலம் வந்துறுமோ - ஆர்த்தகடல்
தண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ
தெண்ணீர்மையாய் இதனைச் செப்பு"[29]

- என்ற திருக்களிற்றுப்படியார் பாடல் சிறப்பாக எடுத்துரைககிறது அருணந்தி சிவாச்சாரியாரும்,

" ஆசான் அருளால் அடிசேர் ஞானம
வந்திடும் மற்றொன்றாலும் வாராதாகும "[30]

- என்று சித்தியாரில் எடுத்துரைக்கிறாா

## இறைவனே குருவாய் வருதல்

உயிர் ஞானத்தை உணரும் பக்குவம் அடைந்த பின்பே ஞானாசிரியர் ஞானத்தை உணர்த்த வேண்டும். உயிர அப்பக்குவநிலையை எய்தியுள்ளது என்பதை அறிந்தாரே அதனை உணர்த்துதல் கூடும். அவ்வாறு அறிவ வல்லவர் யார்? என்பதற்கு,

"அகத்துறு நோய்க்கு உள்ளினர் அன்றி அதனை
சகத்தவரும் காண்பரோ தாம்."[31]

- என்று பதில் கூறுகிறது திருவருட்பயன்.

இதன்பொருள், "வீட்டில் உள்ள ஒருவர்க்கு நோய் வந்தால அதனை அவ்வீட்டிலே உள்ள உரிமை உடையாரேயன்றி மற்று யாரறிவர்? அதுபோல் உயிருக்கு உயிராய் அதனுள் நிற்கின்ற முதல்வன் ஒருவனே உயிரின் அகத்து பொருந்தி இருந்த அறியாமை நிலையையும், அது தேய்ந்து பக்குவம் அடைந்த நிலையையும் அறியத் தகுவன்" என்பதாகும். இதனை அருணந்தி சிவாச்சாரியாரும்,

"பண்டை நற்றவத்தால் தோன்றிப்
பரமனைப் பக்தி பண்ணும்
தொண்டரைத் தானே தூயகதியினில்
தொகுப்பன்(சன்) மார்க்கர்
(மெய்) கண்ட நூல் ஓதி வீடு
காதலிப் பவர்கட்கு ஈசன்
புண்டரிகத் தான் சேரும்
பரிசினைப் புகல லுற்றாம்"[32]

- என்று சித்தியாரில் கூறுகிறார்.

எனவே பக்குவமற்ற உயிர்க்கு ஞானத்தை உணர்த்தும் குருவாய வருபவன் இறைவனே. என்று சைவ சித்தாந்தம் வலியுறுத்துகிறது

இறைவன் வெளிப்பட்டு நின்று அருள் செய்ய எழுந்தருளும போது அவன் ஆசிரியத் திருமேனி தாங்கி வருவான சிவஞானபோதம் இவ்வாறு இறைவன் எழுந்தருளுகின்ற தன்மையை

"தம் முதல் குருவுமாய் தவத்தினில் உணர்த்த"[33] - என்று கூறுகிறது.

குமரகுருபரரும்,

> "கருணைத் திருவுருவாய்க் காசினிக்கே தோன்றி
> குருபரன் என்றோர் திருப்பேர் கொண்டு"[34]

- என்ற கந்தர்கலிவெண்பாவில் அருளுகிறார் மாணிக்க வாசகரும், போற்றித் திருவகவலில்,

> "அருபரத்தொருவன் அவனியில் வந்து
> குருபரனாகி அருளிய பெருமையை -----"[35]

- என்று கூறுகிறார்.

இவற்றிலிருந்து சைவ சமயத்தில் ஞானா ஆசிரியர்க்குத் தரப்படும் சிறப்பிடம் எத்தகையது என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

முதல்வன் தோன்றி அழிதல் இல்லாத அருளையே சரீரமாக உடையவன். குருவானவர் அழியுந் தன்மையுடைய மாயா காரிய சரீரத்தைப் பொருந்தியவர். அவ்வாறிருக்க, அக்குருவினது வடிவத்தை முதல்வன் தனதாகக் கொள்வான் என்றல் எவ்வாறு பொருந்தும் என்பதற்கு,

> "இன்று பசுவின் மலம் அன்றே இவ்வுலகில்
> நின்ற மலமனைத்தும் நீக்குவதிங்கு - என்றால்
> உருவுடையான் அன்றே உருவழியப் பாயும்
> உருவருள வல்லான் உரை."[36]

- என்று திருக்களிற்றுப்படியார் பாடல் விடை யளிக்கிறது.

இவ்வுலகில் பசுவின் சாணம் அழுக்கு எனக் கூறப்படுமாயினும் இடங்களைத் தூய்மைப் படுத்துவதற்கும் ஆனைந்து ஆட்டுவதற்கும், திருநீற்றினை விளைவிப்பதற்கும் பயன்படுத்தப்படுகிறது அது போல இறைவன் மேற்கொண்ட குருவடிவம் மானவனது பாசங்கள் அனைத்தையும் அகற்றவல்லது.

வேட்டுவர் விலங்கைக் காட்டி விலங்கைப் பிடிப்பது போல இறைவனும் மானிட வடிவம் தாங்கி, ஞான குருவாகி வந்து உயிர்களை ஆட்கொள்கிறான் என்று திருவருட்பயனில் உமாபதிசிவம் கூறுகிறார்.[37]

ஒரு தாய் தன் மகனின் மீது கொண்ட அன்புக்கு ஈடு இணை சொல்ல முடியாது. அருவமாய் வெளிப்படாது இருக்கின்ற அவ்வன்பு, இம்மகவு பசியால் அழும் காலத்து, முலைப்பாலாக வெளிப்பட்டு

அம்மகவின் பசியைத் தணிக்கின்றது. அது போல் அருவமாய அருள்வடிவாய் இருக்கின்ற இறைவன், மாணாக்கன் ஞான வேட்கையால் தவிக்கும் காலத்து குரு வடிவாய் வெளிப்பட்டு அம்மாணாக்கனுக்கு ஞானத்தை உணர்த்தி அருள் பாலிக்கின்றான்.[38]

## முதல்வன் ஞானத்தை உணர்த்தும் முறை

விஞ்ஞானகலர்க்கு முதல்வன் உயிருக்குயிராய் உள்நின்று ஞானத்தை உணர்த்துவான். பிரளயாகலர்க்கு முதல்வுன் நான்கு தோள்களும் முக்கண்ணும் கரைமிடறும் உடைய தன் இயற்கை உருவொடு முன்னே நின்று குருவாய் உபதேசம் செய்து ஞானம உணர்த்துவான். சகலருக்கு குருமூர்த்தி வடிவாய் மானுட வடிவிலே மறைந்து நின்று ஞானம் உணர்த்துவான்

எனவே எல்லா உயிர்களுக்குமாக முதல்வன் ஞானத்தை உணர்த்தும் முறை மூன்றாகும் என்பது விளங்குகின்றது.

இவ்வாறு வீடுபேற்றிற்கு சாதனமாக விளங்கும் ஞானத்தைப பெறும் வழியை சைவ சித்தாந்தம் எடுத்துக் கூறுகிறது. இனி, இந்த ஞானத்தின் படிநிலைகளைப் பற்றி அடுத்த இயலில் காணலாம்.

### அடிக்குறிப்புகள்

1 சிவஞான போதம் சூத்.8: அதி 1: மேற்கோள்
2 பெரியபுராணம். திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம்:70
3 சுந்தரர் தேவாரம் 7· 39· 2·
4 சிவஞானபோதம். சூத்.8: அதி 1. ஏது
5. குமரகுருபரர், கந்தர்கலிவெண்பா, கண்ணி 19.20
6. சிவஞான போதம், சூத் 8. அதி 1. உ,வெ.1
7. ........ .. . . ... , சூத்.8 அதி.1. உ,வெ.2.
8 மணி சி க , சிவஞான மாபாடியம், ப.903
9 . மேலது, 897
10 பழநியப்பனார் கி சிவவழிபாடு , கொழும்பு கொட்டாஞ்சேனை அருள்மிகு வரதராஜ பெருமாற் கோவில் வெளியீடு, ப.54
11. தாயுமானவர் பாடல்கள் பராபரகண்ணி 157
12. திருநாவுக்கரசர் தேவாரம் 6. 31 3
13 .. .. . . ., மேலது, 5· 133 9
14. திருஞானசமபநதா தேவாரம், 2 21 4

15. பெரியபுராணம். தடுத்தாட்கொண்ட புராணம்.127.
16. சுந்தரர் தேவாரம். 7: 51: 10:
17. சித்தியார். சூத்.8: பா.18.
18. சீனிவாசன். வீ., "சைவசித்தாந்தம் சாதனையும், பயனும்." proceedings of the second inter national saiva siddhanta seminar -malaysia - 1986. ப.30.
19. மணி. சி.சு., சிவஞான மாபாடியம், ப.897.
20. திருவாசகம், போற்றித்திருவகவல், வரி-42.
21. மணி. சி.சு., சிவஞான மாபாடியம், ப.918,919.
22. .................., மேலது, ப.921.
23. பட்டினத்துப்பிள்ளையார், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை. பா.4. வரி 23.
24. திருவருட்பயன், 51
25. திருவாசகம், திருக்கழுக்குன்றப் பதிகம், 1
26. குமரகுருபரர், கந்தர்கலிவெண்பா, கண்ணி 19-22
27. சைவ சமயநெறி.
28. திருவருட்பயன், 50.
29. திருக்களிற்றுப்படியார், 6
30. சித்தியார். சூத்.12: பா 6.
31. திருவருட்பயன், 42
32. சித்தியார், பாயிரம், 3.
33. சிவஞானபோதம், சூத்.8.
34. குமரகுருபரர் கந்தர் கலிவெண்பா, கண்ணி 24.
35. திருவாசகம், போற்றித் திருவகவல், வரிகள் 75,76
36 திருக்களிற்றுப்படியார், 7.
37. திருவருட்பயன், 45
38 சிவஞானபோதம், சூத் 8: அதி.2. உ.வெ.3

## இயல் நான்கு

# ஞானத்தின் படிநிலைகள்

முற்பிறவிகளிற் செய்த சரியை, கிரியை, யோகங்களின் பயனாக குரு வந்து உணர்த்த அவ்வுபதேசம் பெற்றவர் அனைவரும் உடனே முடிந்த முடிபாகிய சாயுச்சியம் என்னும் பரமுத்தி நிலையை அடைந்து விடுவதில்லை. இதற்கு அவரவர் பக்குவநிலையே காரணமாகும்.

உயிர்கள் தோறும் ஆணவமலப் பிணிப்பு ஒரே வகையாக இல்லாமல் வெவ்வேறு வகையாய் இருக்கும். இதனால் அதன் பரிபாக நிலையும் அதற்கேற்ப நிகழும். ஆகவே குருவின் உபதேசத்தின் மூலம் சிவ முதற்பொருளே ஏனைய எல்லா பொருள்கட்கும் பற்றுக்கொடு எனப் பொதுவாகக் கேட்டல் என்ற அளவில் எல்லோர்க்கும் நிட்டை நிலையாகிய முத்திநிலை கைகூடுவதில்லை. அவ்வுபதேசத்தை நூல்களில் பொருந்துமாறு சிந்தித்தல் பின் அதுவே உண்மையென ஒருதலையாகத் தெளிதல் இவையெல்லாம் உயிர்களின் பக்குவத்திற்கேற்ப மந்தமாகவோ தீவிரமாகவோ நிகழும்.

அதிதீவிர நிலை வரும்பொழுது சிந்தித்தல், தெளிதல் இவை எல்லாம் விரைவில் நிகழ்ந்து நிட்டை எனப்படும் முத்திநிலையும் விரைவில் கைக்கூடும். இதனையே ஞானத்தின் படிநிலைகளாகக் கூறுவர்.

> "கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை
> கிளத்தவென வீரிரண்டாங் கிளக்கின் ஞானம்
> வீட்டை யடைந்திடுவர் நிட்டை மேவினோர்கள் ..."[1]

- என்று சித்தியாரும்,

> "முந்திய வொருமையாலே மொழிந்தவை கேட்டல் கேட்டல்
> சிந்தனை செய்தல் உண்மை தெளிந்திடல் அதுதானாக
> வந்தவா றெய்தல் நிட்டை மருவுதல என்று நான்காம்
> இந்தவா றடைந்தோர் முத்தி எய்திய இயல்பினோரே"[2]

- என்று சிவப்பிரகாசமும் கூறுகின்றன.

இவற்றை முறையே ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்றும் பகுத்துக் கூறுவர்.

கேட்டல் என்பது பொதுவான காட்சியாகவும், (நிருவிகற்பக் காட்சி) சிந்தித்தல் என்பது ஐயக்காட்சியாகவும், தெளிதல் என்பது

தெளிவான சவிகற்பகாட்சியாகவும் அமையும். இனி இப்படிநிலைகளை விரிவாகக் காணலாம்.

### கேட்டல்

பக்குவமடைந்த ஆன்மாவிற்கு, அவ்வான்மா முற்செய்த தவத்தினால் இறைவனே ஞானகுருவாகத் தோன்றி, உயிரிக்கு உயிராக அவ்வான்மாவோடு என்றும் நீங்காது அவற்றின் அறிவு, இச்சை, செயல்களை விளக்கி வருகின்ற இறைவனை உணர்ந்து நிற்குமாறு உபதேசிக்க, அதனைச் செவிவழியாக கேட்டு நிற்றலே கேட்டல் எனப்பட்டது.

தனது கிரணத்தோடு தோன்றும் ஞாயிற்றின் சந்நிதி மாத்திரையானே சூரியகாந்தக்கல்லின் கண் நெருப்பு விளங்கித் தோன்றுவது போல, கேட்பித்தலோடுந் தோன்றும் மேம்பட்ட ஞானாசிரியன் சந்நிதி மாத்திரையானே மாணாக்கன் மாட்டு, முந்திய ஞானமாகிய (ஞானத்தின் முதல் படிநிலையான) கேட்டலறிவு விளங்கித் தோன்றும். பின் அப்பதியினுள்ளே பசுவும் நிருவிகற்பமாய் விளங்கித் தோன்றும். பின் அப்பதியினுள்ளே பிரபஞ்ச வடிவாகிய பாசமும் நிருவிகற்பமாய் விளங்கித் தோன்றும்.

மேலும், இறைவன் அணு ஒரண்டமாம்படி நேரியனாகலால் உயிருக்கு உயிராய் நின்ற நிலையும், அண்டமோரணுவாம்படி பரியனுமாகலால் யாண்டும் நின்ற நிலையும் ஆக எல்லாம் நிருவிகற்பமாய் விளங்கித் தோன்றும் என்னும் பொருள்பட,

"சூரிய காந்தக் கல்லினிடத்தே செய்ய
சுடர் தோன்றியிடச் சோதி தோன்று மாபோல
ஆரியனாம் ஆசான் வந்தருளாற் றோன்ற
அடிஞான மான்மாவிற் றோன்றும், தோன்றத்
தூரியனாஞ் சிவன்றோன்றுந் தானுந் தோன்றுத்
தொல்லுலக மெல்லாந் தன்னுள்ளே தோன்றும்
நேரியனாய்ப் பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கும்
நின்றநிலை யெல்லாமுன் னிகழ்ந்து தோன்றும்" [3]

- என்று அருணந்தி சிவாச்சாரியார் கேட்டல் பற்றியும் அதனாற் பெறும் அனுபவம் பற்றியும் கூறுகின்றார்.

இவ்வாறு ஞானாசிரியரின் உபதேசத்தின் மூலம், மாணாக்கன் கேட்பது என்ன என்பதை இனிக் காணலாம்.

"இனி, இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான்
மயங்கித் தம்மை உணரா என்றது"[4]

- என்கிறது சிவஞானபோதம்.

உயிர்கள் ஐம்பொறிகளால் மயக்க அறிவை எய்தித் தமது உண்மையியல்பை உணரமாட்டாதனவாய் உள்ளன. அதாவது, ஆன்மாவினது அறிவு, ஐம்பொறி முதலிய கருவிகளால் வருவது அவை புலன் உணர்வைத் தருமேயன்றி மெய்யுணர்வாகிய ஞானத்தைத் தர மாட்டா. அவற்றால் உண்டாகின்ற அறிவு நில்லாதவற்றை நிலையென உணரும் புல்லறிவேயாகும்.

"அவைதாம் பளிங்கில் இட்ட வண்ணம் போல்
காட்டிற்றைக் காட்டி நிற்றலான்"[5]

- என்கிறது சிவஞானபோதம்.

பளிங்கு கல்லில் தீட்டப்பட்ட பல நிறங்கள் அப்பளிங்கின் உண்மையான ஒளியைத் தோன்ற விடாமல் அடக்கித் தமது இயல்பையே பளிங்கினிடத்தில் இடைவிடாமல் தோற்றுவித்து நிற்கும். அதுபோல, ஆன்மாவைப் பொருந்தியுள்ள ஐம்பொறி முதலிய கருவிகள் ஆன்மாவின் உண்மையியல்பை - வியாபக அறிவைத் தோனற விடாமல் அடக்கித் தம் இயல்பாகிய ஐம்புல உணர்வையே தோன்றச் செய்கின்றன. இதனால் ஆன்ம சொரூபம் விளங்குமாறு இல்லை அப்பொய்யுணர்வை நீக்கித் தம்மை ஒருவன் உணர்ந்தானாயின் சத்தாகிய சிவத்தை உணர்வான். இதையே,

"பன்னிறங் காட்டும் படிகம்போல் இந்திரியம்
தன்னிறமே காட்டும் தகை நினைந்து - பன்னிறத்துப்
பொய்புலனை வேறு உணர்ந்து பொய் பொய்யா மெய்கண்டான்
மெய்ப் பொருட்குத் தைவமாம் வேறு"[6]

- என்ற சிவஞானபோத உதாரண வெண்பா எடுத்துரைக்கிறது.

ஞானாசிரியர் இவ்வியல்புகளை விளங்க உணர்த்த, அவற்றை சிந்திக்கும் இடத்து ஆன்மாவின் இயல்பு விளங்கித் தோன்றும். அதாவது ஆன்மா எப்பொருளைச் சார்கின்றதோ அப்பொருளின் தன்மையைக் கொண்டு நிற்கும் என்பதை உணரும்.

அதிதீவிர சத்திநிபாதத்தை உடைய உத்தம மாணாக்கனுக்கு, ஞானாசிரியர், "நீ உன் உடம்பு, ஐம்பொறிகள் முதலிய கருவிக் கூட்டத்துள் அகப்பட்டு அவை உனக்கு வேறானவை என்பதை உணராமல் 'அவையே நான்' என மயங்கி நின்றாய் அவைகளுக்கு வருகின்ற தோற்றம், அழிவு, மெலிவு, வலிவு, மேன்மை முதலியவற்றை உன்னுடையனவாகக் கருதித் துன்புற்றாய் அவையோடு கூடியிருத்தல் உனது உண்மையான இயல்பு அன்று அக்கருவிகள் யாவும் சடப்பொருள். நீயோ அறிவுடைய சித்துப்பொருள அக்கருவிகளுக்கே தோற்றம், அழிவு, வளர்ச்சி, தளர்ச்சி முதலிய மாற்றங்கள் உண்டு உண்மையில் உனக்கு அம்மாற்றங்கள் இல்லை நீ சத்தைச் சார்ந்து என்றும் ஒரு நிலையாய் இருப்பதற்கு உரியவன்" என்று அறிவுரை கூறுவார். இக்கருத்தையே சித்தியார் ஒரு உதாரணத்தின் மூலம்,

"மன்னவன்றன் மகன் வேடரிடத்தே தங்கி
வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்
பின்னவனு மென்மகனீ யென்று அவரிற் பிரித்துப
பெருமையொடுந் தானாக்கிப் பேணுமாபோற்
றுன்னிய வைம்புல வேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையு மறியாது துயருறுந் தொல்லுயிரை
மன்னுமருட் குருவாகி வந்து அவரி னீக்கி
மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்"'

- என்று எட்டாம் சூத்திரத்தில் விளக்குகிறது

"வேந்தன் ஒருவனுடைய மகன் வேடர் கூட்டத்திற்பட்டு அவர் தருவனவற்றைப் பெற்று வளர்ந்து வந்தான் வளர்ந்தவன் தன்னை ஓர் அரசன் என்பதை மறந்து, வேடர் வயமே நின்று தன்னை அவ்வேடரின் வேறல்லன் என்றே நினைக்கலுற்றான் அவன் வளர்ச்சியைப் பார்த்துக் கொண்டே வந்த வேந்தன், அவனுக்குச சொன்னால் கேட்டுத் தெளிந்து அச்சொலவழி நிற்கக் கூடிய செவ்வி வருவது கண்டான் உடனே தானும் ஒரு வேடன் உருவிட அவனெதிரில் வந்து அவனோடு சொல்லாடி, 'நீ வேடன் அல்லை அவடர்களிடையே வளர்ந்து உன்னை இன்னான் என அறியாது மறந்து விட்டாய் நீ ஒரு வேந்தனுடைய மகன்' என்று சொல்லித தெருட்டினான் உடனே அவன், வேந்தன் இயலபுகளைக் கேட்டறிநது வேந்தனுடைய பண்புகளை யெண்ணி வேந்தனாய விளககமுற்றான

அது போல சித்துப்பொருளாகிய ஆன்மாவிற்குச் சிவஞானம உணர்த்துவதற்காக இறைவனே ஞானாசிரியராக வந்து உணர்த்தியதும அதிதீவிர சத்திநிபாதத்தை உடைய ஆன்மா, கேட்ட அளவிலேயே முதல்வனது திருவடியை அடைந்துவிடும். அதாவது, ஆன்மா அசத்து சத்து என்னும் இரண்டனுள் ஏதேனும் ஒன்றைப்பற்றி நிற்கு மேயன்றித தனித்து நில்லாது என்றமையான் அசத்தாகிய உடம்பு, ஐம்பொறிகள மனம் ஆகிய கருவிகளைப் பற்றி நின்று அறிவு மயங்கிய ஆன்மா ஆசிரியரின் உபதேசத்தால் தன்னை உணர்ந்து அறிவால அக்கருவிகளின் நீங்கிய அப்பொழுதே சத்தாகிய சிவத்தைச் சேர்ந்து விடும்" என்பது இதன் பொருளாகும். இதனையே,

"இனி, இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின்
வேறாவான் காணவேதனது முதல் சீபாதத்தை
அணையும் - என்றது"[8]

- என்ற சிவஞானபோத மேற்கொளும் எடுத்துக்காட்டுகிறது.

கருவிகளின் நீங்கிய ஆன்மா அப்பொழுதே, சிவத்தை அடைவதற்கு முயற்சி ஏதும் செய்யத் தேவையில்லை. ஊஞ்சலில ஏறி ஒருவன் ஆடுகின்றான். அப்போது ஊஞ்சலில் கயிறு அற்றுப போனால் அவனைத் தாய் போலத் தாங்குவது தரையேயாகும் தரையை அடைவதற்கு அவனாக மேற்கொள்ள வேண்டிய முயறசி ஏதுமில்லை.[9] இதில் இந்திரியங்கள் ஊசல் போன்றவை. ஆன்மா அவ்விந்திரியங்களைப் பொருந்தி நின்று உலக வாழ்வில் தன்னையே தலைவனாகக் கொண்டு ஆடிக் களிக்கின்றது. யாதொரு செயலுக்கும தன்னையே தலைவனாகக் கொள்ளுதலே 'யான்', 'எனது' என்னும செருக்கு ஆகும். யான் என்னும் அகப்பற்றும், எனது என்னும புறப்பற்றும் ஊசலின் இரு கயிறுகள் போன்றவை. கயிறுகள வலிமையாக இருக்கும் வரையில் ஊசலில் ஆடுகின்றவன் தன்னை தாங்கும் தரையை நினைப்பதில்லை. அதுபோல, பற்றுக்கள வலிமையாக இருக்கும் வரை, இறைவன் திருவருளை ஆன்மா நினைததுப பாரப்பதில்லை. ஊசலில் கயிறு அறுந்த அப்பொழுதே அதில் ஆடியவன் நிலத்தைப் புகலாக அடைவது போல், பற்றுக்கள அற்ற அபபொழுதே - அந்த விநாடியே ஆன்மா வேறு எந்த முயற்சியுமின்றி இறைவனது திருவடியைப் புகலாக அடையும்.

எதையாவது ஆதாரமாகக் கொண்டே இருக்கக் கூடிய ஆன்மா தன் இயல்பை உணராமல் கருவிகளோடு கூடாத கேவல நிலையாகிய

இருள் நிலையில் அதற்கு ஆதாரமாக இருப்பது ஆணவமலமாகும். மாறாக ஞானாசிரியன் உணர்த்த தன்னியல்பு இன்னதென உள்ளவாறு உணர்ந்து கருவிகளை விட்டு நீங்கினால் அந்நிலையில் ஆன்மாவிற்கு ஆதாரமாக இருப்பது சிவப்பரம் பொருளாகும். இதில் ஆன்மாவின் முயற்சி எதுவுமே இல்லை என்பதை அறியலாம். இதனை மற்றொரு எடுத்துக்காட்டு மூலமும்,

"சிறை செய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்
சிறை செய் புலன் உணர்வில் தீர்ந்து - சிறைவிட்டு
அலைகடலில் சென்று அடங்கும் ஆறுபோல்மீளாது
உலைவில் அரன் பாதத்தை உற்று."[10]

- என்ற உதாரண வெண்பாவில் எடுத்துரைக்கின்றார் மெய்கண்டார்.

உயர்த்திக் கட்டிய அணையினால் ஆற்றுநீர் தடைபட்டுத் தேங்கி நிற்கும். அதுபோல, கருவிகளால் விளைவதாகிய பாசஞானம் ஆன்மாவின் வியாபகத்தைத் தடுக்க அதன் எல்லைக்குள் ஆன்மாவின் அறிவு தடைப்பட்டு நிற்கும். ஞானாசிரியனாக இறைவன் தோன்றி ஆன்மாவுக்கு உணர்த்தவே அணை தகர்ந்து தடை நீங்கிய அணைநீர் கடலில் சென்று கடலநீரே ஆகி அதன் பின்னர் மீளாதது போன்று ஆன்மாவின் பாசஞானமாகிய தடையினின்று நீங்கிய ஆன்மா சிவபெருமானுடைய திருவடிகளை அடைந்து அத்திருவடி இன்பத்தில் அடங்கிப் பின்னர் மீளாது நிலைத்து நிற்கும்.

இவ்வாறெல்லாம் ஞானாசிரியரின் உபதேசத்தின் மூலம் மாணாக்கன் தெரிந்து கொள்பவற்றை "கேட்டல்" என்ற படிநிலை எடுத்துரைக்கின்றது.

### *சிந்தித்தல்*

கேட்டல் என்ற படிநிலையில் மாணவனுக்கு, முப்பொருள்களின் இயல்பையும் உள்ளவாறு உணர்தல் உண்டாகும். அதனால் இதுகாறும் பொருளியல்பை மயங்கி உணரும்படிச் செய்த ஆணவமலமும், அதன் வழியாகக் கன்ம மலமும், அதற்குச் சார்பாய் நின்ற மாயாமலமும் ஆகிய மும்மலங்களும் நீங்கும். இங்கே நீங்குதல் என்பது இடத்தால் நீங்குதலைக் குறிக்காமல் அறிவினால் நீங்குதலையே குறிக்கிறது.

அதாவது, ஐம்பொறிகளோடு கூடி வாழ்ந்தாலும், அவற்றில் அழுந்தி நில்லாமல்-அவற்றின் வயப்பட்டு நில்லாமல் அவற்றை

வேறாகக் கண்டு விலகி நிற்றலைக் குறிக்கிறது. இந்நிலையில் உயிர் உலகத்தை நோக்குதலை விடுத்துத் தன்னை விட்டு நீங்காத திருவருளை உணர்ந்து நிற்கும். அவ்வாறு திருவருளைப் பற்றிய பின்னரும், உயிர் உலக இன்பத்தை மீண்டும் நோக்குதல் கூடும்.

நீர் நிலையை மூடியிருக்கும் பாசி, அதன் மீது கல்லை எறிந்ததும் சற்றே விலகி, பின் சிறிது நேரத்தில் மீண்டும் மூடிக்கொள்வது போல, பதிஞானத்தால் உயிரை விட்டு நீங்கிய மும்மலங்களும் சிற்சில நேரங்களில் பழக்க வாசனையால் மீண்டும் வந்து பற்றிக்கொள்ளக் கூடும். அப்படி நேரின், நீங்கானை-மெய்யுணர்வு அடைந்த ஆன்மாவை விட்டு நீங்காத இயல்புடைய இறைவனை, இடைவிடாது சிந்தித்து நிற்க அம்மலவாசனை அவ்வுயிரை விட்டு நீங்கும் என்னும் பொருள் பட,

> "ஐம்பொறியின் அல்லை எனும் அந்ததர, சிவனை
> ஐம்பொறியை விட்டு அங்கு அணைசகலன்- ஐம்பொறியின்
> நீங்கான் நீர்ப்பாசி போல் நீங்குமல கன்மம்வரின்
> நீங்கானை நீங்கும் நினைந்து."[11]

- என்ற வெண்பா மூலம் தெளிவாக எடுத்துக்காட்டுகிறார் மெய்கண்டார்.

அதாவது, உபதேசத்தைக் கேட்ட மாத்திரத்தில் உயிர் கருவிகளின் நீங்கி, பற்றுக்களை அறுத்து விடுவதில்லை. அவ்வாறு தாம் கேட்டவற்றை நூல்களிற் கூறியவற்றோடு ஒட்டி வைத்து ஆராய்ந்து உணர்தலே சிந்தித்தல் என்ற படிநிலையாகும். அவ்வாறு சிந்திக்குங்கால் பலப்பல ஐயங்கள் எழும். மீண்டும் மீண்டும் சிந்தித்தலே அவ்வையங்களை நீக்கும்

உலகியலிலும் நில்லாமல் திருவருளிலும் உறைந்து நில்லாமல அங்கும் இங்குமாக உயிர் அலமருகின்ற இவ்வூசலாட்ட நிலை நீங்குவதற்கு சிந்தித்தல் என்ற படிநிலையே பேருதவியாக இருக்கும்

> " சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப்
> பொழிவன (முதல்வன்) அடித்தலம் "[12]

- என்று திருநாவுக்கரசர் தேவாரம் கூறுகிறது.

சிந்தித்தல் எனின் எதைச் சிந்திப்பது? எவ்வாறு சிந்திப்பது? என்ற கேள்விக்கு,

"ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தைநாடி
உராத்துனைத் தேர்த்தென பாசம் ஒருவ
தண்ணிழலாம் பதி விதி என்னும் அஞ்செழுந்தே"[13]

- என்ற சிவஞானபோத நூற்பா விடையளிக்கிறது.

வாக்கு எனப்பட்ட பாச ஞானத்திற்கும், மனம் எனப்பட்ட பசு ஞானத்திற்கும் அப்பாற்பட்டவனாய் விளங்குகின்ற இறைவனை அவனது அறிவாகிய பதி ஞானத்தையே கண்ணாகக் கொண்டு தனது அறிவினுள்ளே ஆராய்ந்து சிந்தித்து உணர்தல் வேண்டும். அப்பதி ஞானத்தை எவ்வாறு பெறுவது? மாயையின் காரியங்களாகிய பாசப் பொருள்கள் அனைத்தும் கானல் நீர் போல நில்லாது நீங்கிப் போவன என்னும் உண்மையைச் சிந்தித்து சிந்தித்து உணர்ந்து, அவற்றின் மீதுள்ள பற்றை விட்டொழித்தால் அப்பொழுது பதிஞானமாகிய திருவருள் பிறவியாகிய கோடை வெயிலைத் தணிக்கின்ற தண்ணிழலாய் வெளிப்படும்.

நாடி, எலும்பு, நரம்பு முதலியவற்றுள் நாம் யார் என ஆராயும் ஆராய்ச்சியறிவானது, நாடி முதலிய அக்கருவிகளால் உண்டாதல் இயலாது. எனின் அவ்வறிவைத் தந்தது எது? நம்முடைய அறிவுக்கு அறிவாய் உள்ள வேறோர் பேரறிவே - முதல்வனது அறிவே அது என்பதை ஆன்மா சிந்தித்து உணரும். அந்நிலையில் அவ்வறிவையே கண்ணாகக் கொண்டு முதலில் முதல்வனை உணர்ந்து பின் அவனிடத்தில் வியாப்பியமாய் உள்ள தன் இயல்பை உணரும்.[14]

கண் தன்னையும் அறியாது; தன்னைச் செலுத்தி நிற்கும் உயிரையும் அறியாது; தனக்கு வேறாய் உள்ள பிற பொருள்களையே அதனால் காண இயலும். அதுபோல, உயிர் தன்னறிவினால் (தன்னின் வேறாகாது ஒன்றாய் உள்ள இறைவனை அறிதல் இயலாது) தனக்கு வேறாய் உள்ள பாசப்பொருள்களையே அறியும், எனினும், முதல்வன் உயிரினது ஆராய்ச்சி அறிவிற்குள் அறிவிக்கும் அறிவாய் மறைந்து நிற்கும் கள்வன் ஆகையால் அவனை சிவஞானமாகிய கண்ணால் சிந்தித்து நாடிக் காண்பாயாக"[15] என்று சிவஞானபோத உதாரண வெண்பா விளங்க உணர்த்துகிறது.

தோன்றாது மறைந்து நிற்றல் பற்றி கள்வன் எனப்பட்ட இறைவன் அகத்தே சிவஞானத்தால் சிந்தித்து நாட வல்லார்க்கு கள்ளம் நீங்கி

வெளிப்பட்டு நிற்பான். இவ்வாறு பதியை அறிவதற்கு பதிஞானத்தால் சிந்தித்தல் ஒன்றே சாதனம் என்பது உணர்த்தப்படுகிறது.

இத்தகைய பதிஞானத்தை எங்கே, எப்படித் தேடிப் பெறுவது? சூரியனது புறவொளி எங்கும் பரவி நிற்றல் போல இறைவனது பேரறிவாகிய பதிஞானம் அகவொளியாய் (எல்லா ஆன்மாக்களோடும் பிரிப்பின்றி) எங்கும் நிறைந்தே நிற்கிறது. பாசஞானத்தால் கட்டுண்ட உயிர்க்கு அப்பேரறிவு விளங்கித் தோன்றுவதில்லை. இதனை உமாபதிசிவம் திருவருட்பயனில்,

"ஊமன் கண் போல ஒளியும் மிக இருளே
ஆம், மன்கண் காணாதவை."[16]

- என்று விளக்குகிறார்

கூகை, ஆந்தை போன்ற பறவைகள் இரவில் தெளிவாகக் காணும் கண்களை உடையனவாயினும் பகலில் கதிரவனின் ஒளிப் பரவி நிற்கின்ற போது பார்க்கும் திறனற்றுப் போகின்றன. அதுபோல சிற்றறிவாலும் பாசப்பொருள்களாலும் உயிர்கள் தம்மைச் சுற்றி நிரம்பியுள்ள திருவருளின் ஒப்பற்ற பேரொளியை உணராது போகின்றன.

அதாவது, நிலையுடைய பதிஞானத்தைக் காட்டாது மறைத்து நிற்கின்ற நிலையில்லாத பாசப்பொருளை 'இவை அசத்து' என மீண்டும் மீண்டும் சிந்தித்து உணர்ந்து அவற்றின் மேலுள்ள பற்றை நீக்கினால் பதிஞானம் விளங்கித் தோன்றும்.

அந்நிலையில், நிர்குணனாய், நின்மலனாய், நித்தியானந்தனாய், தற்பரமாய் நின்ற தனிமுதல்வன், அற்புதம் போல் அவ்வான்மாவின் அறிவிற்குள் அறிவாய் விளங்கித் தோன்றுவான்.[17]

சிவமும் உயிரும் பொருளால் இரண்டாயினும் இரண்டு என்னும் தன்மையின்றி ஒற்றுமைப்பட்டு நிற்பவை. சிவம் வியாபகமாய் மேம்பட்டு நிற்க, உயிர் அதில் வியாப்பியமாய் அடங்கிப் பிரிப்பின்றி இயைந்து நிற்பது. இவ்வாறு பிரிந்து நில்லாது ஒற்றுமைப்பட்டு நிற்கும் நிலையை உயிர் இடைவிடாது சிந்தித்துச் 'சிவன் நான்' எனப் பாவித்தல் வேண்டும். அவ்வாறு பன்னாள் சிந்தித்து நிற்பின் சிவமாம் தன்மை உண்டாவதாகும். இதனையே 'சிவோகம்பாவனை' எனச் சிவாகமங்கள் கூறுகின்றன.

" யானொன்று பாவிக்க நான் அது வாதலால் உன்னை
நானென்று பாவிக்கின் அத்துவித மார்க்கம் உறலாம்."[18]

- என்று தாயுமானவர் கூறுகின்றார்.

இச்சிவோகம் பாவனையாகிய தியானத்தில் பழகுவதே மல வாசனை நீங்குவதற்கு வழியாகும். கருட தியானத்தினால் கருட பாவனை செய்தவன் பாம்பின் விடத்தைத் தீர்த்தல் போல உயிர் சிவோகம்பாவனையில் உறைந்து நின்று பிற உணர்வுகள் தோன்றாதபடி திருவருள் ஒன்றையே பற்றி நிற்குமாயின் மல வாசனை அடியோடு இல்லாது நீங்கும்.

இதனை ஒரு உவமை மூலம் விளக்கலாம். பளிங்குத் தூண் காலை நேரத்தில் சூரியனது ஒளியைக் கிழக்கு பக்கத்தில் மட்டும் கவர்ந்து நிற்கும். பிற பக்கத்தில் வேறு பொருள்களின் நிழலைத் தன்னிடத்தில் கொண்டு நிற்கும். அவ்வாறே மாலைப்பொழுதில் மேற்கு பக்கத்தில் மட்டும் ஒளியைக் கவர்ந்து நிற்கும். அது போல உயிர் பதிஞானமாகிய திருவருளோடு முழுவதுமாக ஒற்றுமைப்பட்டு நில்லாவிடில் உலக உணர்வுகள் தலையெடுக்கக்கூடும்.

ஆனால் உச்சி வேளையில் அத்தூண் சூரிய ஒளியைத் தன்னிடத்தில் முழுவதுமாகக் கவர்ந்து, பிற நிழல்களைச் சிறிதும் கவராது விடுவது போல உயிர் சிவோகம் பாவனையால் திருவருளோடு ஒற்றுமைப்பட்டு அது ஒன்றையே பற்றி நிற்குமாயின் உலக உணர்வுகள் அதனைப் பற்றாது மல வாசனை இல்லாது ஒழியும்.[19]

உலகப் பொருள்களை உவர்த்து நீக்கித் திருவருளைப் பற்றி நின்று அத்திருவருளே கண்ணாகச் சிவத்தைக் காணும் நிலை வாய்த்த போதிலும் உயிர் பலபல பிறவிகளில் பாசப் பொருள்களோடு கூடியிருந்த பழக்கத்தினால் அவற்றோடு ஒற்றுமைப்படுதல் அதற்கு எளிதாகிறது. அக் காரணத்தால் மீண்டும் உலகத்தை நோக்கும் விருப்பம் நிகழ்தல் கூடும். மலங்கள் அவ்வுயிரை விட்டு நீங்கினாலும், மலவாசனை அவ்வுயிரை இவ்வுலகை நோக்கி இருக்கச் செய்யும். இதனை,

" இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும்
அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப்போல
நோக்கிற்றை நோக்கி நிற்கும் ஆகலின் அது நீக்குதற்கு
எனக் கொள்க"[20]

- என்ற சிவஞானபோதத்தில் மெய்கண்டார் மிக அழகாக விளக்கம் அளிக்கின்றார்.

அதாவது, வேப்பமரத்தில் வாழ்ந்து கசப்பான அதன் காய், இலை முதலியவற்றையே தின்று பழகிப் போன புழு, அருகில் வளர்ந்திருந்த கரும்பின் மேல் தற்செயலான விழுந்து அக்கரும்பின் தீஞ்சுவையை இனிது நுகர்ந்ததாயினும், முன்னைப் பழக்கம் காரணமாக முன்பு சுவைத்த அவ்வேம்பினையே மீண்டும் அவாவிச் செல்லுதல் உண்டு அதுபோல உயிர், முற்செய் தவத்தான் பக்குவம் அடைந்து அசத்தை அசத்து என்று உணர்ந்து அவ்வுயிர்க்குப் பதிஞானம் விளங்கித் தோன்றி பதி காட்சிப்பட்ட போதிலும் முன்னைப் பழக்க வாசனையால், முன்பு அசத்து என்று உவர்த்த இவ்வுலகப் பொருள்களின் மேல் மீண்டும் விருப்பம் உண்டாகும்.

இவ்வாறு எல்லாம் நிகழாமல் அப்பழக்க வாசனையை நீக்கிக கொள்வதற்கு என்ன வழி? என்பதற்கே,

" இனி , இவ்விடத்து ஶ பஞ்சாக்கரத்தை விதிப்படி
உச்சரிக்க - என்றது"[21]

- என்ற மேற்கோள் மூலம் விடை கூறுகிறார் மெய்கண்டார்.

அதாவது, 'சிவயநம' என்னும் திருவைந்தெழுத்தை விதிப்படி உச்சரிப்பதே இந்நிலையை நீக்கிக் கொள்வதற்குச் சாதனமாக அமையும் எனப்படுகிறது.

இவ்வைந்தேழுத்துக்களில் 'சி' என்பது சிவபரம்பொருளையும், 'வ' என்பது அவனது ஞானமாகிய பேரருளையும், 'ய' என்பது உயிரையும், 'ந' என்பது உயிர் அசத்தோடு கூடும் போது அசத்தாய் இயைந்து அசத்து நல்கும் நுகர்ச்சிகளை நுகர்வதற்கு உயிரை மறைத்து நின்று இயக்கும் இறைவனது மறைப்பு சக்தி எனப்படும் திரோதான சத்தியையும், 'ம' என்பது மலத்தையும் குறிக்கும்.

இவ்வைந்தெழுத்தையும் அதன் பொருளை சிந்தையில் நிறுத்தி, இதையே மந்திரமாகக் கொண்டு அருச்சனையை இதயத்திலும், ஓமத்தை உந்தியிலும், தியானத்தை புருவ நடுவிலுமாக ஞானபூசை செய்தால்[22] சிவத்துக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பும் சிவத்துக்கும் உலகத்துக்குமுள்ள தொடர்பும், உயிர்களுக்கும் உலகத்துக்குமுள்ள தொடர்பும், அத்தொடர்புக்கான காரணமும், அதனால் விளையும் பயனும் சிந்தைக்கு வந்து, மலவாசனையெல்லாம்

நீங்கி, ஆன்மா தூய்மை பெற்று தன்னிலே சிவனைக் காணும் பேறு பெறும்.

மேலும், இவ்வைந்தெழுத்து மந்திரமே அவனது திருவருள் நீழலை விட்டு நீங்காது நிற்கும் நிலைமையைக் கைவரச் செய்யும். இதனை,

“அண்ணல் முதலா அழகார் எழுத்தைந்தும்
எண்ணில் இராப்பகலற் றின்பதே - நண்ணி
அருளானது சிவத்தே யாக்கும் அணுவை
இருளா னதுதீர இன்று.”[23]

- என்று திருவதிகை மனவாசகங் கடந்தார் உண்மை விளக்கத்தில் கூறியருளியுள்ளார்.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தமை நன்னெறிக்கு உய்ப்பது நமசிவாய என்னும் ஐந்தெழுத்தே. மூவருடைய நமசிவாய பதிகங்களும் இவ்வுண்மையை சிறப்புற எடுத்தியம்புகின்றன. உமாபதி சிவம் திருவருட்பயனில் ‘ஐந்தெழுத்து அருள்நிலை’ என்று ஒரு அதிகாரம் முழுவதும் இதன் இன்றியமையாமையை எடுத்துரைக்கிறார்.

உயிரானது இந்த உலக வாழ்வை உவர்த்து வெறுத்திடவும் இன்னமுதாய் சிவபெருமானின் திருவருள் கைகூடிடவும் உறுதுணையான ‘சிவயநம’ வைப் பெறுவதற்கு நான் என்ன தவம் செய்தேனோ? என்று மணிவாசகர்

“நானேயோ தவம் செய்தேன்
சிவாயநம எனப்பெற்றேன்
தேனாய் இன் னமுதமுமாய்த்
தித்திக்கும் சிவபெருமான்
தானே வந்து எனதுள்ளம்
புகுந்து அடியேற் கருள் செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை
யொறுத்தன்றே வெறுத்திடவே”[24]

- என்ற பாடலில் தேன் சொட்டப் பாடியுள்ளார்.

சமாதி நிலை கைவரப் பெறாதார்க்கும் விதிப்படி அஞ்செழுத்தை உச்சரிக்குங்கால் அதுவே வீட்டு நெறியை காட்டவல்லது. அதனாலேயே

“நன்னெறியாவது நமசிவாயவே”[25] - என்றார் அப்பர் சுவாமிகள்.

திருவைந்தெழுத்து மந்திரத்தை மீண்டும் மீண்டும் விதிப்படி ஓதுகையில் நெருப்பைச் சேர்ந்த இரும்பு தான் நெருப்பின் வேறாய் - இரும்பாய் நிற்றலை விட்டு அந் நெருப்பில் அடங்கி நிற்பது போல, சிவத்தில் சேர்ந்த ஆன்மா தான் வேறாய் நில்லாது சிவனுக்கு அடிமையாய் அடங்கி நிற்கும்.

மேலும் விறகில் மறைந்து நிற்கும் நெருப்பானது தீக்கடைக்கோலை நட்டுக் கயிற்றினால் சுற்றிக் கடையும் போது வெளிப்பட்டுத் தோன்றுவது போல, ஐந்தெழுத்தை சிந்தையில் நட்டு உணர்வாகிய கயிற்றினால் கடைய இறைவன் வெளிப்பட்டுத் தோன்றுவான்."

இவ்வாறு சிந்தித்தல் என்னும் படிநிலையில் சிந்திக்க, சிந்திக்க, மலவாசனை தேய்ந்து தேய்ந்து பெரிதும் மங்கிப் போய் அது மீண்டும் முளை எழாதவாறு வலுவற்று போய்விடும். இந்நிலையிலே ஆன்மாவானது தத்துவதரிசனம், ஆன்மதரிசனம், சிவதரிசனம் இம்மூன்றையும் பெறும். இறுதி நிலையில் அதன் சிந்தையிலே ஒரு தெளிவும் உண்டாகும்.

தெளிதல்

கேட்டல் என்ற படிநிலையில் ஆசிரியர் அறிவுறுத்தியதைக் கேட்டவாறும், பின் சிந்தித்தல் என்ற படிநிலையில் கேட்டவற்றைச் சிந்தித்தும் நூல்களில் அவை பொருந்துமா என ஆராய்ந்தும், தத்துவங்கள் யாவும் அறிவற்ற சடப்பொருள்களே என்பதும். அவைதானல்ல என்பதும் அனுபவமாக விளங்கும். இத்தெளிவுணர்வின் பயனாக அத் தத்துவக் கூட்டங்களின் சார்பு நீங்கி ஆன்மா தன் அறிவில் ஒரு தெளிவைப் பெறும்.

சூரியனும் அதன் ஒளியும் போலச் சிவம் தானும் தன் அருள் சத்தியும் ஆக இருதிறப்பட்டு நிற்கும். கண் முதலில் சூரிய ஒளியைப் பொருந்திப் பின் அதன் வழியாகச் சூரியனைக் காணுதல் போல, ஆன்மா முதலில் சிவனது சத்தியாகிய திருவருளை அறிந்தே பின் சிவத்தை அறியும் நிலை உண்டாகும். தெளிதல் என்னும் இப் படிநிலையிலேயே உயிர் திருவருள் நிலையை உள்ளது உள்ளவாறு உணர்ந்து அதன் வயப்பட்டு ஒன்றி அவ்வருளால் அன்றி ஒன்றை அறிதலும் செய்தலும் இல்லாது நிற்கும். தன் செயலென எதுவுமில்லை எல்லாம் திருவருட்செயலே என உணர்ந்து அத்திருவருளில் அடங்கி

நிற்கும். அவ்வாறு அருளோடு ஒன்றி, அவ்வருளையே சார்ந்து 'யான் எனது' என்ற செருக்கு நீங்கி நிற்பதால் இந்நிலை அருள்நிலை எனப்பட்டது.

இந்நிலையில், அறிபவனாகிய ஆன்மா, ஞாதிரு எனப்படும் தன்னையும், ஞானம் எனப்படும் தனது அறிவையும், ஞேயம் எனப்படும் அறியப்படும் பொருளையும் பகுத்து உணரும்படி நில்லாமல் அறியப்படும் பொருளில் அழுந்தித் தன்னையும் தனது அறிவையும் மறந்து அறியப்படு பொருளாகிய சிவத்தோடு ஒன்றுபட்டு தான் என்னும் நினைப்பின்றி அம்முதற் பொருள் ஒன்றையே அறிந்து நிற்கும். இதனையே ஏகனாகி நிற்றல் என்பர்.

நண்பகல் நேரத்தில் ஞாயிற்றின் ஒளியில் கை விளக்கை ஏற்றி வைத்தால் விளக்கின் ஒளி மழுங்கி ஞாயிற்றின் ஒளியில் ஒன்றாகிப்போவது போல, ஆன்மா தற்போதம் இழந்து இறைவன் அருளில் ஒன்றி நிற்கும், இதனை

"வீட்டில் இருக்கின் என், நாட்டிலே போகில் என்
கூட்டில் வான் சாத்தி நின்று உந்திபற
கூடப்படாதது என்று' உந்திபற"[2]

- என்ற திருவுந்தியார் எடுத்தியம்புகிறது.

இல்லறத்தை மேற்கொண்டு மனையறம் காத்து வாழ்வதானாலும், துறவறத்தை மேற்கொண்டு வீட்டைவிட்டு வெளியேறி, மூர்த்தி, தலம். தீர்த்தம் என்று நாடெல்லாம் சுற்றினாலும், இறையறிவாகிய கூட்டில் உயிரறிவாகிய வானினைச் சாத்தி நின்று இறைவன் திருவருள் வயப்பட்டு ஒழுகுவதே சிறந்தது. அவ்வாறு நின்றாலன்றி, சிவப்பேறு கைவருவதில்லை. எனவே தன்முனைப்பற்றவர்க்கு மட்டுமே இறைவன் திருவருள் கைக்கூடும் என்பது இப்பாடலில் நன்கு விளக்கப்பட்டது.

"எதனையும் ஒர்த்து ஒர்த்து பாராமல், ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றாமல் உற்று உற்று நினையாமல், நீ யென்று முனைந்து நில்லாமல் அசைவற்று அத்திருவருளோடு ஒன்றுவாயாக"[23] என்று உமாபதிசிவம் திருவருட்பயனில் கூறுகிறார்.

வேண்டும் பொருள் எல்லாவற்றினும் தலை சிறந்ததாகிய இத்திருவருள்[24] அல்லவோ பிறப்பு இறப்பு இவற்றை அறுத்து மெய்ப்பொருளை உணரவைத்து இணையில்லா பேரின்பத்தை உயிர்

நுகர்வதற்கு துணை நிற்கிறது. இதனையே காரைக்கால் அம்மையார் அற்புதத் திருவந்தாதியில்

> " அருளே உலகெலாம் ஆள்விப்பது ஈசன்
> அருளே பிறப்பு அறுப்பதானால் -அருளாலே
> மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
> எப்பொருளும் ஆவது எனக்கு"[30]

கையில் ஏந்திய தீபம் இருளில் வழிகாட்டி முன் செல்ல அதன் ஒளியை வழி காட்டியாகக் கொண்டு பின் செல்வதே பயன் தரும்: அதுபோல, இறைவனின் திருவருளை முன் நிறுத்தி அதன் ஒளியை வழிகாட்டியாகக் கொண்டு அதன் பின் செயல்படுதலே உயிருக்குப் பயன் தரும்.[31]

அதாவது எச்செயலைச் செய்யினும் தன்முனைப்பால் "யான் செய்கின்றேன்" எனக் கருதிச செய்யாது முதல்வனுக்குப் பின் நின்று, "எல்லாம் அவன் செய்விக்கின்றான், செய்கின்றான். ஆதலால் இச் செயலின பயனாக வரும் நன்மை, தீமை, இன்பம், துன்பம், புகழ், இகழ் ஆகியவற்றுள எதுவும் என்னுடையதன்று, எல்லாம் அவனுடையதே" என உணாந்து நிற்றலையேக் குறிக்கிறது. இதனையே இறைபணி நிற்றல எனபர்

இறைவனை முற்பட நிறுத்தி,

> " கூறும் நாவே முதலாகக்
> கூறும் கரணம் எல்லாம் நீ
> தேறும் வகைநீ திகைப்பும் நீ
> தீமை நன்மை முழுதும் நீ"[32]

- என வரும் வரிகளில் எல்லாமே இறைவன் செயல் என்பதை உணர்ந்து பாடியுள்ளமை நன்கு புலப்படுகிறது.

சஞ்சித வினை முழுவதும் சுட்டு எரிக்கப் பட்டு நீங்கிய இந்நிலையில் இறைபணி நிற்றலினால் ஆன்மா இப்பிறப்பிற்கென்று முகந்து வந்த பிராரத்த வினை தாக்காமல் அதனை ஊட்டுவிபபவனாகிய இறைவனது முன்னிலையில் உடல் ஊழாய் வந்து நீங்கும். மேலும் பிராரத்தத்தை அவற்றில் அழுந்தாது விருப்பு வெறுப்பின்றி நுகர்வதனால் புதியனவாகிய ஆகாமிய வினைகள் ஏறமாட்டா. இதனை

"எத்தனுவில்நின்றும் இறைபணியார்க்கு இல்லைவினை"[35]

- என்கிறது சிவஞானபோதம்.

பிராரத்த வினை காரணமாக இறைவனே மாயா காரியமாகிய உலகப் பொருள்களைக் கூட்டுவித்து உயிரை அவற்றோடு பிணைத்து வைப்பான். இறை பணி நிற்றலினால் பிராரத்த வினை தாக்காது ஒழியவே அவரது உணர்வில் உலகியல் தோன்றாது. அதாவது மாயா மலமும் நீங்கும் என்பதாகும். இதனையே

"அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யானாகவே
அஞ்ஞான கன்மம் பிரவேசியா ஆகலான்"[36]

- என்கிறது சிவஞானபேதம்.

இறைபணியில் நின்றார் எவ்வினையைச் செய்தாலும் அது தவமாகவே முடியும். ஆகாமியமாய் முடிதல் இல்லை என்பதை

"இவனுலகி லிதமகிதஞ் செய்த வெல்லாம்
இதமகித மிவனுக்குச் செய்தார் பா லிசையும்
அவனிவனாய் நின்றமுறை ஏகனாகி
அரன் பணியினின்றி டவு மகலுங் குற்றஞ்
சிவனுமிவன் செய்தியெல்லா மென் செய்தி யென்றும்
செய்த தெனக் கிவனுக்குச் செய்த தென்றும்
பவமகலவுடனாகி நின்று கொள்வன் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே"[37]

- என்ற அருணந்தி சிவாச்சாரியார், சித்தியாரில் எடுத்துரைக்கிறார். சண்டேசுர நாயனாரின் [38] வரலாறும் இதனை நன்கு புலப்படுத்துகிறது. அதைக் கருத்திற் கொண்டே "பாதகத்துக்குப் பரிசு வைத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே"[39] என்று சேந்தனாரும், "சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்"[40] என மாணிக்கவாசகரும் குறிப்பிடுகின்றனர்.

இவ்வாறு அனைத்தையும் இறைபணியாக உணர்ந்தவர் இறைவனிடத்தில் எதனையும் வேண்டார். அவை அனைத்தையும் இறைவன் செயலாக-அவனுடைய விருப்பமாகவே கொள்வர்.

"வேண்டத் தக்கது அறிவோய் நீ
வேண்ட முழுதும் தருவோய் நீ
வேண்டும் அயன்மாற்கு அரியோய் நீ
வேண்டி என்னைப் பணி கொண்டாய்
வேண்டி நீயாது அருள் செய்தாய்
யானும் அதுவே வேண்டி னல்லால்
வேண்டும் பரிசொன்று உண்டென்னில்
அதுவும் உன்தன் விருப்பன்றே"[33]

- என்று மாணிக்கவாசகர் பாடி அருளியது இத்தகைய தெளிந்த நிலையின் நின்றுதான் என்பது நமக்கு தெளிவாகிறது. மேலும் அத்தகையோர் எதையும் தனது உடைமை எனக் கருதாது எல்லாம் அரன் உடைமை என்றே கொள்வர்.

என்றுமே இறைவனுக்கு உடைமைப் பொருள்களான உடல், பொருள், ஆவி மூன்றையும் ஞானியர், அவன்பால் ஆக்குவிப்பர் என்பதை

"அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை
ஆட் கொண்டபோதே கொண்டிலையோ
இன்றோ ரிடையூ றெனக்குண்டோ
எண் தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே"[34]

- என்ற திருவாசகப் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

இறைவன் தன்னைச் சார்ந்து தன் அருளின் வழி நிற்பவரைத் தன்னைப் போலச் செய்வான். அதாவது வினையைச் செய்தும் அவ்வினையினால் பற்றப்படாது நிற்கும்படி செய்வான்.

இதனாலன்றோ திருநாவுக்கரசரும்,

"தன்னை யடைந்தார் வினை தீர்ப்பதன்றோ
தலையாயவர்தம் கடன் ஆவதுதான் ..........."[41]

என்று கூறியருளினார்.

எந்தவொரு பொருளும் தன்னை அடைந்தவர்க்குத் தன் பயனைத் தருமேயன்றி, அடையாது விலகி நின்றவர்க்குத் தன் பயனைத் தருதல் இல்லை. மழையில் நனைந்து குளிரில் நடுங்கும் ஒருவன் தீயை அணுகினால் குளிர் நடுக்கம் நீங்கி இன்புறுவான். அவ்வாறல்லாது தொலைவில் நின்று கொண்டு இத்தீ நம் நடுக்கத்தை நீக்குமா என்று நினைத்துக் கொண்டிருப்பவனுக்கு அத்தீ எவ்வாறு பலன் தரும்? அத்தீயைப் போல இறைவன் தன்னை நண்ணியவர்க்கு வினை துன்பத்தை நீக்கி இன்பத்தையும் நண்ணாதவர்க்கு அதனைச் சேர்ப்பித்தும் நிற்பான்.

"சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க் கல்லால்
நலமிலன் .............................."[42]

என்று அப்பரும்,

"சார்ந்தவர்க்கு இன்பங்கள் தழைக்கும் வண்ணம்..."[43]

என்று ஞானசம்பந்தரும் கூறியுள்ளதை இங்கு நினைவு கூறலாம்.

வண்டியின் சக்கரத்தை வேறு வழியிற் செல்ல விடாது தன்னிடத்திலேயே சுழலும்படி செய்கின்ற அச்சினைப் போன்று சிவன் தன்னைச் சார்ந்தவரைத் தன்னை விட்டு நீங்கவிடாமல் அணைத்து நிற்பான.[44] அவரும் சிவோகம் பாவனையில் சிவமேயாய் நின்று சிவத்தையே விடாது உணர்ந்து நிற்பர். அச்சிவ உணர்வு, ஒளி இருளை ஓட்டுவது போல் ஆகாமிய வினையை நிலைபெறாது ஓடும்படிச் செய்துவிடும்.

இந்நிலையில் ஆன்மா தத்துவ சுத்தியும் ஆன்ம சுத்தியும் திகழ்ந்து சிவயோகத்தை அடைந்து தெளிவு பெறும்.

*நிட்டை*

ஞானம் பெற்றோர் சிவரூபத்தைக் கேட்டு, தரிசித்து, தெளிந்து அதன் முடிநிலை இன்பமாகிய சிவானுபவத்தை - பேரின்பத்தைப் பெறுவதுதான் நிட்டை எனப்படும். இதுவே சிவப்பேறு என்று கூறப்படும் இன்புறு நிலையாகும்.

மாசு நீங்கித் தூய்மை பெற்ற உயிர் தெளிந்த நிலையில் திருவருளைச் சார்ந்த அளவிலேயே இப்பேரின்பம் விளையாது. அத்திருவருள் வழியாகச் சிவத்தையறிந்து அதனிடத்தில் அழுந்தும் போதே பேரின்பம் விளைவதாகும்.

அதாவது திருவருளில் அழுந்திய நிலை "அருள் நிலை" என்றும், அத்திருவருள் வழியாகச் சிவத்தில் அழுந்திய நிலை "ஆனந்த நிலை" என்றும் கூறப்படும். கண் சூரியனது ஒளியைப் பொருந்துவது போன்றது அருள்நிலை. அவ்வொளியைப் பொருந்திய கண் அதன் வழியாக நோக்கிச் சூரியனைக் கண்டு அதில் அழுந்துவது போன்றது ஆனந்த நிலை. இது சிவானந்த அனுபூதி எனப்படும்.

தீவிரத்தின் மேம்பட்ட அதிதீவிரம் என்னும் மிகு சத்திநிபாதம் வரும்போதுதான் ஞானத்தில் ஞானமாகிய இந்த நிட்டை கூடுதல் வாய்க்கும். நிட்டை நிலையிலேயே அழுந்தி மீளாது நிற்போர் இவ்வுலகத்திடையே வாழ்ந்தாலும், காட்சிப்படும் உலகப் பொருள்களைக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிந்தாலும் அவற்றின் வயப்படாமல் அவற்றில் அழுந்தி நில்லாமல் அவை தன்னுடையனவல்ல என்பதைத் தெளிந்து அவற்றை வேறாகக் கண்டு பரமாகிய சிவம் ஒன்றையே நோக்கி நிற்பர். இதையே அருணந்தி சிவாச்சாரியார்,

"பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்....."[45]

என்று சித்தியாரில் விளக்கியுள்ளார்.

"ஏகமாய் நின்றே இணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான் விளைந்த பொற்பினா - லேகமா
யுள்ளத்தின் கண்ணானா னுள்குவா ருள்கிற்றை
யுள்ளத்தாற் காணானோ வுற்று"[46]

என்கிறது சிவஞானபோதம்.

நான் என்று ஒரு பொருள் இல்லை என்று உணர்ந்து இறைவனோடு ஏகனாகி இறை பணி நின்றவர்கள் தமது பிராரத்த வினையாலே ஏதேனும் ஓர் அனுபத்தை நுகர்வராயின் அதனையும் சிவபோகமாகவே கொள்வர் ".... கண்டதோர் பொருளை அந்தக் கருத்தினால் காணின்"[47] என்று சிவப்பிரகாசம் கூறுகிறது. இதனையே

"காணுங் கரணங்கள் எல்லாம் பேரின்பமெனப்
பேணும் அடியார் ..........."[48]

- என்கிறது திருவாசகம்.

இறைவன் ஆன்மாவுக்கு கண் எனப்படும் அறிவுமாயினான் ஆதலால் நினைப்பவர்தம் நினைப்பைக் காணானோ என்று ஆசிரியர் உணர்த்துகிறார். இதனை,

"அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே"[49]

- என்கிறார் காரைக்காலம்மையார்.

## உயிர் சிவமாம் தன்மை பெறல்

முத்தி நிலையில் சிவத்தைச் சார்ந்த உயிர் 'நான்' என்பது சிறிதும் தோன்றாமல் சிவமாகவே நிற்கும். மாணிக்கத்தைச் சார்ந்த பளிங்கு அம்மாணிக்கமாகவே நிற்றல் போன்றது. பளிங்கு மாணிக்கமாகவே ஆகிவிடவில்லை ஆயினும் மாணிக்கத்தின் தன்மையைத் தன் தன்மையாகக் கொண்டு காட்டுகிறது. அதுபோல முத்தியில் உயிர் சிவமேயாகி விடவில்லை. ஆயினும் சிவத்தின் தன்மையைத் தன் தன்மையாகப் பெற்று நிற்கும். சிவத்தினது தன்மையாவது எண் குணங்களாகும்.[50] அவ்வெண் குணங்களும் தன்னிடத்து விளங்கப் பெற்று, பளிங்கு மாணிக்கமே எனும்படி விளங்கினாற்போல உயிர் சிவமே எனும்படி நிற்கும்.

## சிவத்துக்கும் உயிர்க்கும் உள்ள தொடர்பு

முத்தியில் உயிரும் சிவமும் ஆகிய இரு முதல்களும் உண்மையில் உள்ளன. ஆயினும் பிரிந்து வேறு வேறாக நில்லாது ஒரு பொருள் போல நிற்கும். அதாவது கலப்பினால் ஒன்றாய் நிற்கும அதாவது உயிரும் சிவமும் பொருளால் ஒன்று அன்று. அதே நேரத்தில் தம்முள் இயைபு இல்லாத வேறு வேறு இயல்பினை உடைய இரண்டு பொருள்களும் ஆகா. சிவத்துக்கும் உயிருக்கும் உள்ள இத்தொடர்பே அத்துவிதம் என்ற சொல்லால் அழகாகக் குறிக்கப்படும்.

சிலர் கூறுவதுபோல் உயிரும் சிவமும் ஒன்று என்றால் உயிா சிவத்தோடு ஒன்றுபட வேண்டியதில்லை. அன்றி அவை இரு பொருள்களானால் அவை ஒருகாலும் ஒன்றுபடா என்பதை,

"ஒன்றாலும் ஒன்றாது இரண்டானும் ஓசை எழாது
என்றால் ஒன்றன்று இரண்டும் இல்"[51]

- என்கிறார் உமாபதிசிவம்.

இந்நிலையில் பெறுவான் வேறு. அவன் பெறுகின்ற பேறு வேறு அப் பேற்றினால் விளைகின்ற பேரின்பம் வேறு. எனவே அந்த நிலை ஒன்றன்று. முத்தியைச் சேர்ந்த உயிர் மீண்டும் பிறப்பதில்லை ஆகையால் இரண்டும் அன்று. அவை தனித்துத் தோன்றாமையினால் உள்ளதுமன்று. அதே நேரத்தில் உயிருக்கு சிவப் பேரின்பத்தை நுகர்கின்ற பேறு கிடைப்பதால் இல்லாததுமன்று. நல்லதையும் தீயதையும் பகுத்துக் காணும் உயிரின் அறிவிற்கு அப்பாற் பட்டு உள்ளதனால் நன்றும் அன்று, தீயதும் அன்று. இந்நிலை சுட்டி உணரப்படும் இயல்புடையதன்று. ஆதலால் நான், நீ என்று பிரித்துக் காணும் இடமன்று. தற்போதம் கெட்டதனாலே உயிரின் அறிவும் அன்று. தோற்றம், முடிவு என்ற இரண்டையும் கடந்ததனாலே தலையுமன்று. அடியுமன்று என்று விளக்கமாகவே,

" ஒன்றன்று இரண்டன்று உளதன்று இலதன்று
நன்றன்று தீதன்று நானென்று - நின்ற
நிலையன்று நீயன்று நின்னறிவும் அன்று
தலையன்று அடியன்று தான்"[52]

- என்ற திருக்களிற்றுப்படியார் பாடல் எடுத்துரைக்கின்றது.

இந்நிலை சொல்லின் வரம்புக்கு உட்படாத நிலையாகும் இன்னது அதன் தன்மை என்று வரையறுத்துக் கூறமுடியாத இந்நிலையை, உப்பானது நீரில் கலந்து அந்நீரோடு ஒன்றாய் நிற்றலை உவமையாகக் கூறுவர்.

நீரைச் சேர்ந்த உப்பு தான் கெடாது தன் கடினத் தன்மை மட்டுமே கெட அந்நீரோடு ஒன்றாகிறது. அதுபோல உயிர் தான் கெடாது தன்னைப் பற்றியுள்ள ஆணவமலம் மட்டும் கெட அதனால் திருவருளைப் பற்றி சிவத்தோடு ஒன்றும்.

நீரில் கலந்த உப்பு கண்ணுக்குப் புலப்படாது நீராகிய ஒரு பொருளே உள்ளதாகத் தோன்றும். அதுபோல உயிர் சிவத்தில் அழுந்தி வேறாகக் காணப்படாது நிற்கச் சிவம் ஒன்றே உள்ளதாகத் தோன்றும்

நசித்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்றா
நசித்திலதேல் ஒன்றாவதில்லை - நசித்து மலம்
அப்பு அணைந்த உப்பின் உளம் அணைந்து சேடமாம்
கப்பு இன்றாம் ஈசன் கழல்.[54]

- என்கிறது சிவஞானபோதம்.

உப்பும் நீரும் கலந்த நிலையில் அதனை ஒன்றென்பதா? இரண்டென்பதா? அது போல உயிரும் சிவமும் கலந்த முத்திநிலை ஒன்றென்றோ இரண்டென்றோ கூற முடியாத அத்துவித நிலையாகும்.

“ --------- ------------- அந்நிலையில்
ஒன்றாகாமல் இரண்டாகாமல்
ஒன்றும் இரண்டும் இன்றாகாமல்
தன்னது பெருமை தாக்கா ளாயினும்
என்னது பெருமை யெல்லா மெய்தித்
தன்னை எனக்குத் தருவதை யன்றியும்
என்னையும் எனக்கே தந்து தன்னது
பேரானந்தப் பெருங்கட லதனுள்
ஆரா இன்ப மளித்துத் தீரா
உள்ளும் புறம்பும் ஒழிவின்றி நின்ற
வள்ளன்மை காட்டி மலரடி யருளிய
மன்னன் --------- ------------ ”[55]

- என்று அருணந்தி சிவாச்சாரியார் முத்தியின் இயல்பை இருபா இருபஃதில் எடுத்துரைக்கிறார்.

இவ்வாறு இறைவன் உயிர்களோடு அத்துவிதமாய் நின்று அவை இவ்வுலகை அறிந்து நுகரும்படிச் செய்கின்றச் செயலை, காட்டும் உபகாரம் எனவும், காணும் உபகாரம் எனவும் இரு வகையாகக் கூறுவர்.

கண்ணொளியானது தானே சென்று பொருள்களைக் காண மாட்டாது. அக்கண்ணொளி காண வேண்டுமாயின் விளக்கொளி முதலிய ஏதேனும் ஓர் ஒளியின் துணை அதற்கு வேண்டும். வேறோர் ஒளியொடு கூடிய போதே கண்ணொளி பொருள்களைக் காணும் நிலைமையைப் பெறும. அதுபோல உயிரறிவும் தானே எதனையும அறிய மாட்டாது. முதல்வனது அறிவு உயிரறிவில் கலந்து நின்று அதனை விளக்கிக் காட்டி யாதொன்றையும் அறியச் செய்யும் இவ்வாறு இறைவன் உயிர்களுக்குச் செய்யும் ‘உபகாரம் காட்டும்’ உபகாரம் எனப்படும்.

“ காட்டா தனவெல்லாம் காட்டிச் சிவம் காட்டி
தாள் தாமரை காட்டித் தன்கருணைத் தேன்காட்டி”[56]

- என்கிறது திருவாசகம்.

விளக்கொளியால் கண்ணொளி விளங்கிக் காணுந் தகுதியைப பெற்றாலும் தானேச் சென்று அப்பொருளைக் காண மாட்டாதாகும் கண்ணாற் காணப்படும் அப்பொருளினும் அவ்வொளி சென்று பொருந்த வேண்டும். அதாவது விளக்கொளி கண்ணொளியை விளக்கியதோடு அதன் உடன் சென்று காணப்படும் பொருளையும் பற்ற வேண்டும்.

அதுபோல இறைவன் உயிரினது அறிவை விளக்கி அறியும் தன்மையை உண்டாக்குவதோடு, அவ்வறிவு சென்று பொருளை அறிதற்காக தானும் உடன் நின்று அப்பொருளை அறிகின்றான் இவ்வாறு உயிர் அறிவதற்காகத் தானும் நின்று அறிகின்ற அவனுடைய இப்பேருபகாரமே 'காணும் உபகாரம்' எனப்படுகிறது.

> " ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை
> உணரும் என்றது"[57] -சிவஞானபோதம்

திருவிசைப்பாவில் திருமாளிகைத் தேவர் அருளிய முதல் பதிகத்தில் அமைந்த பதினொரு பாடலின் இறுதியிலும் அமைந்த "தொண்டனேன் விளம்புமா விளம்பே", "தொண்டனேன் பணியுமா பணியே", "தொண்டனேன் கருதுமா கருதே", "தொண்டனேன் உரைக்குமாறுரையே", "தொண்டனேன் நணுகுமா நணுகே" "தொண்டனேன் இசையுமா றிசையே", "தொண்டனேன் நுகருமா நுகரே", "தொண்டனேன் புணருமா புணரே", "தொண்டனேன் தொடருமா தொடரே", "தொண்டனேன் விரும்புமா விரும்பே" "தொண்டனேன் நினையுமா நினையே"[58] என வரும் வரிகள் நான் அறிவதன் பொருட்டு நீயும் அறிவாயாக என விண்ணப்பிப்பதாக அமைந்துள்ளன. பெத்த நிலையில் இவ்வுலகத்தையும் முத்திநிலையில் சிவத்தையும் உயிர் உணரும் பொருட்டே இருநிலையினும் இறைவன் தானும் உடன் நின்று உணர்கின்றான்.

## அன்பு நிலையும் ஆனந்த நிலையும்

இவ்வாறு உயிர்களின் இச்சை, கிரியை, ஞானம் ஆகிய எல்லாம இறைவனின் இச்சா ஞான கிரியா சக்தியாய் இருக்க, உயிர்கள் அவனது இவ்வுதவியைப் பெரிதும் உணர்ந்து போற்றக் கடமைப்பட்டனவாகும அவனது இத்தகைய கைம்மாறு கருதாத கருணையை உள்ளவாறு உணர்ந்தால் அவன்மீது ஆறாத அன்பு பெருகி, அவ்வன்பே அரன்கழலுக்கு-ஆனந்தநிலைக்கு இட்டுச் செல்லும். இதனையே

"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே"[59]

என்கிறது சிவஞானபோதம்.

இறைவனிடத்தில் வைக்கும் ஆராத அன்பே உயிரை அவனிடத்தில் அழுந்தச் செய்யும். ஊனினை உருக்கும் அத்தகைய பேரன்பே பேரின்பத்தை அளிக்கவல்லது. இதனையே மாணிக்க வாசகர் "அன்பினில் விளைந்த ஆரமுதே"[60] என்றார்.

திருமூலரும், "ஆர்வம் உடையவர் காண்பர் அரன் தன்னை"[61] என்கிறார் திருமந்திரத்தில். மேலும் "அன்பும் சிவமும் -------", "அன்பே சிவமாய் அமர்ந்த ----"[62] என்ற வரிகள் சைவ சமயத்தில் அன்பிற்குரிய பெருமையை விளக்குகிறது.

இன்பங்களுக்கெல்லாம் தலையாய முத்தி இன்பம் இப்பிறவியிலேயே எய்துமாயின் அது அன்பு நிலையில் விளைந்ததுவே என்று

"இன்பில் இனிது என்றல் இன்று உண்டேல் இன்று
உண்டாம் அன்பு நிலையே அது"[63]

- என்று உமாபதி சிவம் திருவருட்பயனில் எடுத்துரைக்கின்றார்.

இத்தகைய "இறவாத இன்ப அன்பை"[64] வேண்டிய காரைக்கால் அம்மையார், அற்புதத் திருவந்தாதியில்,

"பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன் --------"[65] - என்கிறார்.

அன்பே வடிவாகியவனே, என் அன்புக்குரியவனே, என்று பலவாறும் அன்பினால் அழுது அரற்றி அன்பே நிறைவாக, தன்முனைப்பு அற்று, அறிவும் உணர்வும் இழந்து அரன் மீது அன்பு பாராட்டி நிற்பதே அவனை அடையும் நெறியாகும். அன்பு இல்லாமல் தீர்த்தம் தியானம் சிவார்ச்சனைகள் செய்யும் அவையெல்லாம் எந்த பலனையும் தாரா., என்பதை

“ அன்பே அன்பே என்று அன்பால் அழுது அரற்றி
அன்பே அன்பாக அறிவு அழியும் - அன்புஅன்றித்
தீர்த்தம் தியானம் சிவார்ச்சனைகள் செய்யும் அவை
சாற்றும் பழமன்றே தான்”[66]

- என்ற பாடலில் திருகளிற்றுப்படியார் எடுத்துரைக்கின்றது.

அன்பிற்கு முழு இலக்கணமாகத் திகழ்ந்தவர் கண்ணப்பர். அவரைப் போல் இறைவன்பால் அன்பு செலுத்தியவர்கள் வேறு யாருமிலர் என்பதை,

“ கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை என்றமையால்
கண்ணப்பன் ஒப்பதோர் அன்பதனைக் - கண்ணப்பர்
தாம் அறிதல் காளத்தியார் அறிதல் அல்லது மற்று
யாமறியும் அன்பன்று அது”[67]

- என்று திருக்களிற்றுப் படியார் எடுத்துக் கூறும். இத்தகைய அன்பு இறைவன் மீது மீதூர்வதற்குக் காரணமாய் இருப்பது அவன் தாமாக முன்வந்து, கருணையினால் உயிர்களை ஆட்கொள்கின்ற அவனுடைய எளிவந்த தன்மையே. பால் நினைந்து ஊட்டும் தாயினும் சால பரிந்து ஊனினை உருக்கி, உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாயத் தேனினைச் சொரிந்தவன் நாயிற் கடையாய நாயேனை நயந்து ஆட்கொண்டார் என்கிறார் மாணிக்கவாசகர்.

பெத்தத்தில் உயிருக்குயிராய் நின்று உலக போகத்தை நுகர்வித்து வளர்த்த அவனது கைம்மாறு கருதாத பெருங்கருணையையும், முத்தியில் உடனாயிருந்து ஆனந்தத் தேன் சொரியும் அவனது பெருந்திறனையும் நினையுந்தொறும், பேசுந்தோறும் அருளாளருக்கு அவனிடத்து இடையறாப் பேரன்பு மேன்மேலும் மீதூர்ந்த விளையும்.

“ தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே
நினையுந்தொறும் காணுந்தொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத் தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன் சொரியும்
குனிப் புடையானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ”[68]

- என்கிறது திருவாசகம்.

இவ்வாறு உருகி உருகி பெருகும் அன்பினால் சிவத்தின் கண் அழுந்தி சிவபோகம் அனுபவிக்கும் நிலையே தவத்தின் முதிர்ச்சிநிலையாகும். தாம் வேறாக நில்லாது திருவருளிலே பொருந்தி சிவத்தோடு ஒன்றிய இத்தவ முதிர்ச்சி உடையோரையே பெற்றார் அல்லது 'முக்தர்' என்று குறிப்பிடுவர்.

சூரியன் எல்லார் முன்பும் வேறுபாடின்றி ஒளியைப் பரப்பி நின்றாலும் காட்சியுடைய கண்ணுடையார் மட்டுமே அதனைக் காணல் இயலும். கண்ணில் ஒளி இல்லாதவர்க்கு-படலத்தால் மறைக்கப்பட்ட கண்ணுடையார்க்கு எங்கும் இருளாகவே தோன்றும். அதுபோல இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பினும், இத்தகைய தவமுதிர்ச்சி உடைய முத்தர்க்கே புலப்படுவான். பாசப்பற்றில் அழுந்திய ஏனையோர்க்கு அவன் இல்பொருளேயாவான என்பதை,

"அருக்கன் நேர் நிற்பினும் அல்இருளே காணார்க்கு
இருட்கண்ணே பாசத்தார்க்கு ஈசன், -- அருட்கண்ணால்
பாசத்தை நீக்கும் பகல் அலர்த்தும் தாமரைபோல்
நேசதத்தின் தன்னுணர்ந்தார் நேர்"[69]

- என்ற வெண்பாவில் விளக்குகிறார் மெய்கண்டார்.

கதிரவன, தாமரை அரும்புகள் அனைத்தையும் ஒரே நேரத்தில் மலரச் செய்வதில்லை. பக்குவப்பட்டு மலரும் செவ்வியை எய்திய தாமரை மொட்டினை மட்டுமே மலரச் செய்யும். அவ்வாறே இறைவனும் தவ முதிர்ச்சியால் பக்குவப்பட்டு பக்தியினான் தன்னை மறவாது ஏத்துவார்க்கே பேரின்பத்தை நுகரும்படிச் செய்வான்.

ஆணவ மலத்தின் சத்தி அடியோடு நீங்கப் பெற்று, ஆனம அறிவு வியாபகமாய் விளங்க ஆன்மா இறைவனது திருவடியை அடைந்து பேரின்பத்தில் திளைக்கும் இந்நிலையே சுத்தநிலையாகும்.

இவ்வாறு உருகிப் பெருகும் அன்பினால் சிவத்தின் கண் அழுத்தி உறுதியாக நிற்றலே நிட்டைநிலை எனப்படுகிறது. இதைச் சமாதிநிலை, மோனநிலை என்றும் கூறுவர். உடம்பு உள்ளபோதே இந்நிலையை அடைபவரே சீவன்முத்தர் எனப்படுவர். அவர்கள் தன்னை மறந்து, இவ்வுலகை அனுபவித்து நிற்பர். இத்தகையோர் நிலை பற்றி அடுத்த இயலில் காணலாம

**அடிகுறிப்புகள்**

1. சித்தியார், சூத்.8: பா.24
2. சிவப்பிரகாசம், 83.
3. சித்தியார், சூத்.8: பா.28.
4. சிவஞானபோதம், சூத்.8: அதி.3: மேற்கொள்.
5. ........................................................ ஏது
6. ........................................................ உ.வெ. 1
7. சித்தியார், சூத்.8: பா. 1
8. சிவஞானபோதம், சூத்.8: அதி.4: மேற்கொள்
9. ........................................................ ஏது
10. ........................................................ உ.வெ.1
11. சித்தியார், சூத்.8: 39
12. திருநாவுக்கரசர் தேவாரம், 4: 92:1.
13. சிவஞானபோதம், சூத்.9.
14. ...................... சூத்.9: அதி.1.: உ.வெ.1
15. ........................................................ 2
16. திருவருட்பயன், 19.
17. சிவஞானபோதம், சூத்.9: அதி2: உ.வெ. 1.
18. தாயுமானவர் பாடல்கள், எங்கும் நிறைகின்ற, 3
19. ஆனந்தராசன்.ஆ., சிவஞானபோதம் வழித்துணை விளக்கம், அ.அ.மன்ற வெளியீடு, ப.244
20. சிவஞானபோதம், சூத்.9: அதி.3: ஏது.
21. ........................................................ மேற்கொள்
22. ........................................................ உ.வெ.1.
23. உண்மை விளக்கம், 42
24. திருவாசகம், திவேசறவு, 10.
25. திருநாவுக்கரசர் தேவாரம், 4: 112
26 ............... ................................ 5: 893
27. திருவுந்தியார், 30
28 திருவருட்பயன், 31.
29. ............................ 58.

30. அற்புதத் திருவந்தாதி, 9.

31. ஆனந்தராசன். ஆ., <u>சிவஞானபோதம் வழித்துணை விளக்கம்,</u> அ.அ.மன்றம், ப. 263.

32. திருவாசகம், குழைத்தபத்து, 5.

33. ...................................................... 6.

34. ...................................................... 7.

35. சிவஞானபோதம், சூத்.10: அதி.2: உ.வெ.1

36. ...................................................... ஏது

37. சித்தியார், சூத், 10க: பா.1

38. பெரியபுராணம், சண்டேசுர நாயனார் புராணம்,

39. திருப்பல்லாண்டு, 10.

40. திருவாசகம், தோணோக்கம், 10.

41. திருநாவுக்கரசர் தேவாரம், 4: 1: 4

42. ...................................................... 4: 109

43. திருஞானசம்பந்தர் தேவாரம், 1: 113: 5

44. மணி. சி.சு. <u>சிவஞானமாபாடியம்</u>, ப. 1026.

45. சித்தியார், சூத். 11: பா.2.

46. சிவஞானபோதம், சூத். 11: அதி.1: உ.வெ.2.

47. சிவப்பிரகாசம், 96.

48. திருவாசகம், பண்டாய நான்மறை, 6.

49. அற்புதத் திருவந்தாதி, 20.

50. அற்புதத் திருவந்தாதி, 20.

51. எண் குணங்களாவன :

    1. தன்வயத்தனாதல்
    2. தூய உடம்பினனாதல்
    3. இயற்கை உணர்வினனாதல்
    4. முற்றும் உணர்தல்
    5. இயல்பாகவே பாசங்கள் இன்மை
    6. முடிவிலா ஆற்றல் உடைமை
    7. பேரருள் உடைமை
    8. வரம்பிலா இன்பம் உடைமை.

51. திருவருட்பயன், 75.

52. திருக்களிற்றுப்படியார், 58.

53. திருவாசகம், கோயிற்றிருப்பதிகம், 7.

54. சிவஞானபோதம், சூத்.11: அதி.2: உ.வெ.3.

55. இருபா இருபஃது, 20.

56. திருவாசகம், அம்மானை, 6.

57. சிவஞானபோதம், சூத். 11: அதி.2: உ.வெ.3.

58. திருவிசைப்பா, கோயில். 1. ஒளிவளர்விளக்கெ

59. சிவஞானபோதம், சூத். 11.

60. திருவாசம், பிடித்தபத்து, 3.

61. திருமந்திரம், முதல் தந்திரம், 273.

62 .......... ........................................... 270

63. திருவருட்பயன், 80.

64. திருத்தொண்டர் புராணம், காரைக்கால் அம்மையார் புராணம், 60.

65. அற்புதத் திருவந்தாதி, 1

66. திருக்களிற்றுப்படியார், 55.

67. ......................................... 52.

68. திருவாசகம். திருக்கோத்தும்பி, 3.

69. சிவஞானபோதம், சூத். 11: அதி.2: உ.வெ.2.

## இயல் ஐந்து

# ஞானம் பெற்றோர் நிலை

(அணைந்தோர் தன்மை)

***சீவன் முத்தர்கள்***

ஏகனாகி இறைபணி நிற்பதும், அவ்வேகன்பால் அயரா அன்பு செய்வதும் ஆகிய இருவகைச் சித்தாந்த சைவச் செந்நெறிகளை மேற்கொண்டு ஒழுகுபவன் சிவஞானியாவான். இவ்வாறு முத்தி நிலையில் நிறபவருடைய அறிவு, இச்சை, செயல்கள் யாவும் இறைவனை நோக்கியே நிகழும். இவர்கள், *சீவன்முத்தர்* என்றும் பரமுத்தர் என்றும் இருவகைப்படுவர். நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி அண்ணலார் சேவடிக்கீழ் அமர்ந்திருப்பவர் பரமுத்தர் எனப்படுவர். உடம்போடு கூடி வாழும் காலத்திலேயே இந்த உயா நிலையை எய்தியவர்கள் *சீவன்* முத்தர்கள் எனப்படுவர். இவர்களை அணைந்தோா என்றும், இவர்களது இயல்பை அணைந்தோர் தன்மை என்றும் கூறுவதை மெய்கண்ட நூல்களில் காணலாம்.

அவர்கள் உலக நினைவின்றிச் சிவத்தில் அழுந்தி சிவானநதத்தில் திளைத்திருபபா இந்நிலையை தூங்காமல் தூங்குதல் என்று நூல்கள் குறிப்பிடும். தம்மையும் உலகையும் மறந்திருத்தலால் தூங்குதலும், சிவத்தை உணா்ந்து நிற்றலால் விழித்திருத்தலும் ஆகிய இரு நிலைமையும் ஒருங்கு நிகழ்தலை இவ்வாறு உணர்த்துவர்.

பிராரத்த வினை காரணமாக இன்பம் வரினும் துன்பம் வரினும *சீவன்* முததா தாமரை யிலையில் நீர் போலச் சிறிதும் பற்றின்றி ஒரு தன்மையாராய் இருப்பர். இறைவன் திருவடியை எப்பொழுதும பிரியாது நிற்றலால் அவர்களுக்கு எந்நாளும் இன்பமே யன்றி துன்பமில்லை . இறைவன் திருவடி நிழலின் அருமையை,

" மாசில வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை யிணையடி நீழலே"[1]

- என்று அப்பர் சுவாமிகள் அனுபவித்துக் கூறுகின்றார்.

### சீவன் முத்தர் இயல்பு

சிந்தனைக்கு எட்டாதவனாய் - அசிந்திதனாய் நிற்கும் இயல்பினையுடைய இறைவனை சிந்தனையுள் அகப்படும்படி மாயா காரியங்களாகிய கருவி காரணங்களைக் கொண்டு அறிதல் இயலாது. கருவிகளினின்றும் நீங்கிய முத்தரே காணல் இயலும். அவ்வாறு கருவிகளின் நீங்கி அவனைக் கண்டோர் பின்பு கருவிகளோடு கூடி நின்று உலகத்தோடு தொடர்புற்ற காலத்திலும் அசிந்திதனாய் - சிந்தனைக்கு அப்பாற்பட்டவனாய் நின்ற பதியை சிந்திதனாகக் கண்டு வழிபடுதல் சீவன் முத்தர்க்கே உரிய இயல்பாகும்.

### சீவன் முத்தர் கடமைகள்

சீவன் முத்தி நிலையை எய்திய மெய்ஞ்ஞானிகள் இவ்வுலகத்தில் செய்யவேண்டிய கடமைகள் ஏதுமில்லை என்பது பிறசமயத்தார் கொள்கை. ஆனால் அவர்களுக்கும் கடமைகள் உண்டு என்பது சைவ சித்தாந்தக் கொள்கையாகும். அயரா அன்பின் அரன்கழல் சேர்ந்த அடியவர்களுக்கு, மலவாசனை சிறிதும் தாக்காது காக்கவும், அவர்கள் நுகர்கின்ற பேரின்பத்தை மேன்மேலும் வளர்க்கவும் சில விதி முறைகளைப் பின்பற்றுவர். இது எது போன்றது எனின் செல்வம் மிக்கவர்கள் அருந்துகின்ற ஆவின்பால் உடம்பை வளர்க்கும் உணவும் ஆகி உடம்பை நோயின்றிக் காக்கும் மருந்தும் ஆவது போல என்கிறார் சிவஞான முனிவர். அவ்விதி முறைகளை,

“ செம்மலர் நோன்தாள் சேரலொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே”[2]

- என்று அழகாக எடுத்துரைக்கிறார் மெய்கண்டார்.

### மும்மலங்களைக் கழுவுதல்

ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்களும் ஒருபோதும் அழிவதில்லை என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. எனவே அவை உண்மை ஞானத்தைத் தலைப்பட்டவர்களிடத்தும் ஏதேனும் ஒருவகையால் நுழைந்து மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்தி பிறவிக்குக் காரணமாகிய முந்தைய மயக்க உணர்வை மீண்டும்

தோற்றுவிக்கக் கூடும். ஆதலால் அவர்களும் அம்மலங்களைக் களைவதில் கருத்தைச் செலுத்த வேண்டியது கடமையாகும்.

" ஈண்டு ஆணவம் மாயை காம்மியம் என்னும்
மலங்களைக் களைக என்றது"[3]

- என்ற மேற்கோளும்,

" அவைதாம் ஞானத்தை உணர்த்தாது அஞ்ஞானத்தை
உணர்த்து மாகலான்"[4]

- என்ற ஏதுவும் இதனை சிறப்பாக உணர்த்துகின்றன.

முன்பு செய்த புண்ணிய பாவங்களின் பயனாக நிற்பது பிராரத்த வினையாகும். சிவன்முத்தர்க்கு உடம்பு உள்ள வரையில் அது முகந்து கொண்ட பிராரர்த்த வினை வாசனை மாத்திரமாய் நின்று அவரது உணர்வைத் தாக்கும். இதனால் எங்கும் சிவமாய்க் காணுகின்ற காட்சி சிறிது மறைந்து மாயையின் காரியமாகிய உலகம் காட்சிப்படும். அதன் காரணமாக மயக்க உணர்வைத் தோற்றுவிக்கும் ஆணவமலமும் வந்து நுழையும். இதனால் எல்லாம் அவனே என்னும் மெய்யுணர்வு மறைந்து 'யான்' என்றும் 'எனது' என்றும் எண்ணும் தற்போதம் தோன்றும். அது அடுத்த பிறப்பிற்கு வித்தாகிய ஆகாமியவினைக்கு காரணமாகி மீண்டும் பிறப்பிற் செலுத்தி விடும். இவ்வாறு மும்மலங்களும் சமயம் வாய்க்கும் பொழுது நுழைந்து கேடு விளைவிக்கும். அவை மெய்ஞ்ஞானிக்கு ஆகா என்பதால் அவற்றை தோன்றும் பொழுதே அதற்கு இடங் கொடாமல் முளையிலேயே கிள்ளியெறிதல் வேண்டும் என்று,

" புண்ணிய பாவம் பொருந்தும் இக் கான்மியமும்
மண் முதல் மாயை கான் மாயையும் - கண்ணிய
அஞ்ஞானம் காட்டும்இவ் வாணவமும் இம்மூன்றும்
மெய்ஞ்ஞானிக்கு ஆகா, விடு"[5]

- என்ற வெண்பா மூலம் வலியுறுத்துகிறார்.

ஆமையானது தான் வாழும் நீரிலிருந்து வெளிப்பட்டு நிலத்தில் நடக்கும் பொழுது தனக்கு தீங்கு வருவதாக உணர்ந்தால் அப்பொழுதே நான்கு கால்களும் தலையும் ஆகிய ஐந்து உறுப்புகளையும் சுருக்கி ஓட்டினுள் அடங்கிக் கிடக்கும். அது போலச் சிவனை அணைந்தோர் உலகில் வாழுங்கால் மும்மலங்களின் வாசனை தாக்குவதாக உணரின

அறிவை ஐம்புலன்களின் வழிச் செல்லவிடாது அவற்றைச் சிவனது வியாபகத்துக்குள்ளே அடக்கி ஒடுங்கி நிற்றல் வேண்டும் என்பதை

"புலன் அடக்கி தம்முதல்கண புக்கு உறுவர் போதார்
தலன் நடக்கும் ஆமை தக"[6]

- என்ற குறள் மூலம் குறிப்பிடுகின்றார் உமாபதிசிவம்.

மலத்தால் அறிவு மறைக்கப்படாமல் காத்துக் கொள்ளுவதற்கு வழியாக திருவைந்தெழுத்தை விதிப்படி எண்ணுவதைக் குறிப்பிடுவா சைவர்களுக்கு ஒப்பற்ற பெருமையே இவ்வைந்தெழுத்து மந்திரம்தான அதனால் சிவஞானிகள் எப்போதும் இத்திருவைந்தெழுத்தை எண்ணுவதும் ஓதுவதும் இயல்பு. வினைப்பகைக்கு அத்திரமாவதான அஞ்செழுத்தை சிந்தையான் மகிழ்ந்து ஏத்தவல்லாரெல்லாம் பந்த பாசமறுக்கவல்லார்களே என்பது ஞானசம்பந்தர் வாக்கு.

"இருவினைப் பாசமும் மலக்க லார்த்தலின்
வருபவக் கடலில் வீழ்மாக்க ளேறிட
அருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கடல்
ஒருகன்மே லேற்றிட லுரைக்க வேண்டுமோ"[7]

- என்ற சேக்கிழார் வாக்கில் மும்மலங்களாகிய கல்லோடு இருவினையாகிய கயிற்றால் கட்டிப் பிறவியாகிய பெருங்கடலில வீழ்த்தினும் கடையேறிட அஞ்செழுத்து உதவும் என்பது திருநாவுக்கரசரின் வரலாற்றை வைத்தே சிறப்பிக்கப்படுகிறது.

"அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி"[8] வழிபடும சுந்தரரும் "நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமசிவாயவே"[9] என்கிறார்.

### *சிவ பக்தர்களோடு இணங்குதல்*

இவ்வாறு அருள்வழி காட்டும் அஞ்செழுத்தை இடையறாது நினைந்தோதி மலம் கழுவும் சிவஞானியர் உலகியல் வாழ்வில் பலதிற மக்களோடு கூடி வாழவேண்டியவர் அவர்கள் பலரும் சிவஞானம பெற்றவர்களாக இருப்பர் என்பது அரிது. அத்தகைய சிவபத்தரல்லாதார் சீவன் முத்தரது நிலையை மாற்றி திருவருளை மறக்குமபடிச செய்ய நேரிடலாம

"நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு"[10]

- என்ற குறளுக்கேற்ப பிராரர்த்த வினை காரணமாக ஏற்படும் அஞ்ஞானிகளின் தொடர்பு சிவஞானியரின் ஞானக் கண்ணை இழக்கச் செய்து பிறவியாகிய குழியிலே விழும்படிச் செய்யும். "இனிச சிவ பக்தர்களோடு இணங்குக என்றது"[11] என்ற மேற்கோளும் "அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவர் ஆதலான்"[12] என்ற ஏதுவும் இக்கருத்தையே அறிவுறுத்துகின்றன. இது பற்றியே பெரியோர்கள் நல்வினமல்லாத சிற்றினத்தோரை அஞ்சி நீங்குகின்றனர். இறைவனிடத்து "அன்பிலாதவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே"[13] என்றும் "சேவடி பரவி வெண்ணீறு அணிகிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே"[14] என்றும் அச்சபத்து என்ற பதிகம் முழுதும் மாணிக்கவாசகர் பாடியருளியது இதனால்தான் போலும்.

இறைவன் எக்காலத்திலும் தம்மோடு அத்துவிதமாய் உடனிருந்து காட்டியும் கண்டும் உதவி வரும் பெருங்கருணையை இடைவிடாது நினைந்துருகி நிற்கின்ற சிவபத்தர்கள் பிறரையும் பிறவியாகிய குழியினின்றும் விலக்கித் திருவருள் வழியிலே செலுத்தி உதவுவர். சிவத்தின் பால் உண்மையன்புடைய இவர்கள் எல்லா உயிரிடத்தும் அன்புடையராவர். அவரால் இகழப்படுவோர் எவரும் இலர். எல்லோரையும் ஒப்பக் கருதி அவர் உவப்பன செய்யும் நினைவும் சொல்லும் செயலும் உடையவராயிருப்பர். அறுபத்து மூன்று நாயன்மார் வாழ்வின் மூலம் இதனை அறியலாம்.

சைவ சமயத்தில் அடியவர்களிடையே சாதியால் உயர்வென்றும் பிறப்பால் தாழ்வென்றும் வேறுபடுத்திப் பாராது ஒரு தன்மையாகக் காணுவதேக் கொள்கை. இக்கொள்கைப்படி சிவபக்தர்களுக்கு உள்ளமெல்லாம் சிவானந்தப் பெருவெள்ளம் நிறைந்து நிற்பதோடு அல்லாமல் வெளியேயும் சிவக்காட்சியே பரந்து காணப்படுவதால் ஏற்றத் தாழ்வும் வேறுபாடும் இல்லாது உலகை ஒரே தன்மையாகக் காண்பர்.

ஞானம் பெற்றோர் இத்தகைய உண்மைச் சைவர் இலக்கணத்தை மேற்கொண்ட அன்பரோடு மருவி இருத்தலை தம் கடமையாகக் கொள்வதோடு அவ்வாறு அடியார் கூட்டத்துள் தாம் இருப்பதற்கும் இறைவன் அருளை வேண்டிப் பெறுவர்,

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீ இருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்பதானால் அடியேன் உன்

அடியார் நடுவுள் இருக்கும்
அருளைப் புரியாய் பொன்னம்பலத்தெம்
முடியா முதலே என் கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே"[16]

என்ற மாணிக்கவாசகர், கோயில் மூத்த திருப்பதிகத்தில் அடியார் நடுவுள் இருக்கும் அருளை வேண்டிப் பெறுகின்றார்.

***சிவத்திரு வேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனவே வழிபடல்***

உலகியலில் வாழும் சிவஞானிகளுக்கு அவ்வவ்விடங்களும் அவ்விடத்து நிகழும் பொருள்களும் பலபல காட்சிகளை வழங்கும். அவற்றைக் காணுமிடத்து சிவஞானிகளின் செயலும் வேறுபடுவது இயலபு. இதனைத் தவிர்ப்பதற்கு, சிவத்திரு வேடங்களும், சிவாலயங்களும் அரணாக அமையும். இவற்றையே குறியாகக் கொண்டு நோக்கிச் செல்லின் அவை அல்லாதவை காட்சிப்படா.,

"இனி பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும்
பரமேசுரன் எனவே கண்டு வழிபடுக என்றது"[17]

- என்கிறது சிவஞானபேதம்.

பத்தர்தம் திருவேடம் எவ்வாறு இருக்கும் என்பதை அப்பர்-திருநாவுக்கரசரது திருவேடத்தின் இயல்பு கொண்டு உணரலாம்.

"சிந்தை இடையறா அன்பும் திருமேனி தன்னில் அசைவும்
கந்தை மிகையாங் கருத்தும் கைஉழவாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிரு நீறும்
அந்தமிலாத் திருவேடத் தரசும் எதிர்வந் தணைய"[18]

- என்று சேக்கிழார் பெரிய புராணத்தில் அழகுற எடுத்துக் காட்டுகிறார். திருநாவுக்கரசர் வரக் கண்ட போது, அவரது இத்திருவேடம், "கருத்தில் பரவும் மெய்க்காதல் தொண்டர் திருவேடம் நேரே தோன்றியது"[19] எனறு ஞானசம்பந்தரை தொழுது வணங்கச் செய்தது எனின் என்னே இததிருவேடததின் பெருமை.

திருவேடத்தின் நோக்கம் மெய்க்கு அணிசெய்வதன்று. போர்ச் சானறோரது வேடம பகைவரது பகைமையைக் கெடுக்கும் குறிப்பை உடையது போலச சிவஞானச சானறோரது திருவேடம் பிறவிக்குரிய வினைபபகையைக கெடுககும் குறிபபினதாகும். அதுவும சிவபிரானது

திருவருளால் விளைவதாகையால் காண்பாா கருத்தில் தாம் வழிபடும் சிவபரம்பொருளையே அது நினைப்பிக்கும நேயம் அவாவா நெஞ்சினகண் நிகழ்வது ஆயினும நேயம மலிந்தவர் வேடம் காண்பாா உள்ளத்தில் மால் உண்டாக்காது வேடநெறி நிலலாதாா வேடமே, காண்பாா் கருத்தில் மால் உண்டாக்கும் "வேடநெறி நில்லாதார் வேடம் பூண்டென் பயன்?"[20] என்கிறது திருமந்திரம

சேரமான் பெருமாள் என்ற அரசா் வாழவில் நடந்த நிகழச்சி திருவேடத்தின் சிறப்பை எடுத்துக்காட்டும் அரசா் பட்டத்துயானை மீது வரும் போது உவர்மண் சுமந்து மழையில் நனைந்து வண்ணான ஒருவன் எதிரில் வந்தான். உவர் மண் படிந்த அவனது உருவம முழு நீறு பூசிய முனிவர் தோற்றம் போல் விளங்க அரசன் யானையின் மேலிருந்து இறங்கி அவன் அடித்தொழ, அவனோ அஞ்சி, "அடியேன அடிவண்ணான்" என்று கூற, மெய்யுணர்வு நிலையில் நின்ற அரசனோ "அடியேன் அடிசேரன் திருநீற்று வாரவேடம் நினைப்பித்தீா வருந்தாது ஏகும்" என்ற கூறிப பிரிந்தார்.

## இறைவன் விளங்கி நிற்றல்

இறைவன் எல்லா இடங்களிலும் நிறைந்து நிற்பினும் தன் அடியாரிடத்திலும் திருக்கோவிலுள்ளிருக்கும் திருமேனியிலும் மட்டுமே அவன் தயிரில் நெய்போல விளங்கி தோன்றுகின்றான்.

"அவன் மற்று இவ்விடங்களில் பிரகாசமாய் நின்றே
அல்லாத விடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்"[21]

- என்கிறது சிவஞானபோதம்.

சொல்லையும் மனத்தையும் கடந்து நிற்பவனாகிய சிவபரம் பொருள உலகத்தார் தன்னையறியும்படி கருணை காட்டித் திருநீறு உருத்திராக்கம் முதலிய தன அடையாளங்களைத் தனது அடியார்களாகிய அன்பர்களுக்கு வழங்கியருளுகிறான் அவனது அடியவாகள் சிவோகம் பாவனையில் பழகித் தன்னையறியும்படியும அருள் செய்கின்றான். குறிகளைக் கடந்து நின்ற தன்னை உள்ளவாறு உணரும அனபர்களிடத்திலே தயிரிலே நெய் போல விளங்கித தோன்றுகிறான்

"தன் உணர வேண்டித் தனது உருவைத் தான்கொடுத்துத்
தன் உணர தனனுள இருததலால - தன உணரும

நேசத்தர் தம்பால் நிகழும் ததி நெய் போல்
பாசத்தார்க்கு இன்றாம் பதி"[22]

- என்ற வெண்பா இதனை விளக்கிக் காட்டும்.

சங்கம வழிபாடு என்று சிறப்பித்துக் கூறப்படும் "அடியவர் வழிபாடு செய்வோர் கருவொன்றிப் பிறவார்"[23] என்று உண்மை விளக்கம் கூறுகிறது.

"பெருமையால் தம்மை ஒப்பார் பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார் ஊனம் மேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார் அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்து நின்றார் இவரை நீ அடைவாய்"[24]

- என்று திருவாரூர் தேவாசிரியர் மண்டபத்தில் எழுந்தருளியுள்ள அடியவர்களின் பெருமையைச் சுந்தரருக்கு இறைவனே கூறியதாக சேக்கிழார் கூறுகிறார்.

நடமாடும் கோவில்[25] ஆகத் திகழும் அடியவரை வழிபடுவதால் வாசனாமலம் தாக்காது. எப்போதும் திருவருட் சார்பிலேயே நிற்க உறுதுணையாக இருக்கும் என்பதால் சீவன் முத்தர் மாலற நேயம மலிந்தவர் வேடத்தை வழிபடுதல் வேண்டும் என்கின்றாா மெய்கண்டார்.

## திருக்கோவில் வழிபாடு

சிவஞானியர் திருக்கோவிலினுள் நிலைப்படுத்தப்பட்ட சிவலிங்கத் திருமேனிகளையும் சிவனாகவேக் கண்டு வழிபடுவா விறகினிடம் தீ எப்போதும் உள்ளதே. தீக்கடை கோலால் கடைந்த போது விறகிற்குள்ளே அமைந்திருந்த தீ வெளிப்பட்டுத் தோன்றும் முதலில் அவ்வாறு தோன்றவில்லை என்பதனாலே விறகிலே தீ இல்லை என்று அறிவுடையார் கருதார்.

உயிர்களுக்கு அறிவையும் முத்திப் பேற்றையும் வழங்குதற பொருட்டு கண்ணுக்குப் புலனாகின்ற சிவலிங்கத் திருமேனியில இறைவன் எழுந்தருளியுள்ளான். யாவற்றையும் சிவமாகவே காணுகின்ற மெய்யடியார்களுக்கு அதாவது ஏகதேசமாய் குறித்தலின்றி அனபு மாத்திரையான் வழிபடுகின்ற ஞானிகட்கு கன்றை நினைந்தவுடனே பசுவின் முலையில் பால் விம்மி யொழுகுவதுபோல கருணை மிகுதியால அவ்வன்பே தானாய் வெளிப்பட்டு நின்று அருள்செய்வான். இதை,

"திருக் கோயி லுள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டார்க்குச் சிவனுறைவன் அங்கே
உருக்கோலி மந்திரத்தா லெனநினையு மவர்க்கும்
உளனெங்கு மிலனிங்கு முளனென் பார்க்கும்
விருப்பாய வடிவாகி யிந்தனத்தி னெரிபோல்
மந்திரத்தில் வந்துதித்து மிகும் சுரபிக் கெங்கும்
உருக்காண வொண்ணாத பால் முலைப்பால் விம்மி
யொழுகுவது போல் வெளிப்பட்டருளுவனன்பர்க்கே"[26]

- என்ற சித்தியார் பாடல் எடுத்துக்காட்டுகிறது.

திருக்கயிலாயம் நோக்கிச் சென்ற திருநாவுக்கரசருக்குத் திருவையாற்றில் அமைந்த காட்சிகள் சிவதரிசனப் பயனை நல்கின. அத்தகைய கோவில்களைக் கணடவிடத்து அவை சிவபரம்பொருளே என எண்ணி வழிபடுதல் சிவஞானச் சைவர்கட்குக் கடமையாகும்.

"தொண்டாகளிடத்தும் வானோர் தொழும திருமேனிதானும
அண்டரும கண்டிலாத அண்ணலே என வணங்கி
வெண் தரளங்கள் சிநத விழி மொழி குழறி மெய்யே
கண்டு கொண்டிருப்பர் ஞானக் கடலமுது அருந்தினோரே"[27]

- என்று சிவப்பிரகாசத்தில் உமாபதிசிவம் கூறுவதும் நினைவிற கொள்ளத்தக்கது.

## இலிங்க வழிபாடு

பசுவின் பால் அதன் உடலில் பரவி உளளதெனினும் அது வெளிப்பட்டு நிற்குமிடம் அதன் மடியேயாகும். அதுபோல இறைவன் எல்லாப் பொருளையும் தன் வடிவாகக் கொண்டாலும் அவற்றில் அவன் வெளிப்பட்டு நில்லாமல் திருக்கோவிலுள் இருக்கும் சிவலிங்கம் முதலிய திருமேனியில் விளஙகித் தோன்றி அருள் புரிவான்

அத்திருமேனியே அன்பு விளையும் இடமாகும் இத்தகைய சிவலிங்க வழிபாடே அத்துவித ஞானத்தை நிலைபெறச் செய்யும்.

குடுமித் தேவரின் நாமத்தைக் கேட்ட அளவிலேயே ஞானம் பெற்றும், ஞானம் கைவரப் பெற்ற ஆறு நாட்களிலேயே ஆறாத அன்பினால், முத்தி பெற்று இறைவனின் வலத்தே இருக்கும் பேறும் பெற்ற கண்ணப்ப நாயனாருக்குக் குடுமித்தேவர் வடிவிலே காட்சி கொடுத்து அருள் பாலித்தான் இறைவன்.

திருஞானசம்பநதரும். திருநாவுக்கரசரும சுநதரரும தமிழகத்தில திருவுலா வந்த போது திருக்கோவிலகள் அனைததும அவர்களுக்கு சிவபரம் பொருளாகவே விளங்கின. அவாகள் அப்பரம பொருளோடு உரையாடினர். வேணடிய வேண்டியாங்குச சிவபரம்பொருளால நல்கியருளப் பெறறனர் ஆதலால் ஆலயஙகளை அரனெனவே தேறி வழிபடுக என்று மெய்கண்டாா அருளிச் செய்கின்றார்

இத்தகைய சிறந்த நெறியினைக் கடைபிடித்து ஒழுகும் சிவஞானியர் எல்லாவற்றையும் அறியும் அறிவைப் பெற்றிருந்தும சிவபரம் பொருளன்றி வேறெதையும் அறியார். அவ்வாறு அவர்கள சிவம் தவிர பிறவற்றை அறியாதிருத்தல் அறிய இயலாமையால் அன்று, அறிய விரும்பாததேயாகும். மேலும் சிவனது தலைமையை உணராது அலைபவர் படுகின்ற துன்பத்தை எண்ணி இரங்கி கருணையால் அவ்வுயிர்களை உய்விக்க முற்படுவர்.

### அடிக்குறிப்புகள்

1. திருநாவுக்கரசர் தேவாரம், 5: 884
2. சிவஞானபோதம், சூத்; 12.
3. ...............................................: அதி.1: மேற்கொள்.
4. ...............................................: அதி. 1: ஏது.
5. ...............................................: அதி. 1: உ.வெ. 1.
6. திருவருட்பயன், 94.
7. திருத்தொண்டர் புராணம், திருநாவுக்கரசு சுவாமிகள்புராணம், 129
8. சுந்தரர் தேவாரம், 7. 13. 1.
9. திருக்குறள், 452.
10. சிவஞானபோதம, சூத். 12: அதி. 2: மேறகோள.
11 ... .. . . .. ... . .. . .. ..... ஏது
12 திருவாசகம், அச்சபபத்து, 2
13. . .... .......... ........ ................ 5.
14 சிவஞானபோதம். அவையடக்கம்
15 திருவாசகம், கோயில மூததிருப்பதிகம், 1
16. சிவஞானபோதம, சூத. 12: அதி. 3. மேற்கொள
17 திருத்தொணடர்புராணம திருஞானசம்பநதசுவாமிகள் புராணம 270

18. ........................................................................................................ 271.

19. திருமந்திரம், 240

20. சிவஞானபோதம், சூத். 12: அதி. 3: ஏது

21. ........................................... ........................ உ.வெ.1.

22. உண்மை விளக்கம், 51.

23. திருத்தொண்டர் புராணம், தடுத்தாட்கொண்ட புராணம், 196.

24. திருமந்திரம், 1857

25. சித்தியார், சூத். 12: 4.

26. சிவபிரகாசம், 98.

27. மணி, சி. சு. சிவஞானமாபாடியம், ப.1096.

*இயல் ஆறு*

# தசகாரியப் படிநிலைகள்

ஞானத்திலே வேட்கை உடைய ஆன்மா, உண்மைச் சரியை, கிரியை, யோகங்களாகிய தவத்தினை மேற்கொண்டு ஒழுகி வரும் நிலையில் அபரஞான சாதனையாகிய ஞான சாத்திர ஆராயச்சியிலே ஈடுபடும் நிலை உண்டாகும். உடல்மீது கொண்ட பற்றும் இவ்வுலகின் மீது கொண்ட பற்றும் அறுவதற்கு இவ்வாராய்ச்சி ஞானமே துணை நிற்பதாகும். பின்னர் இவ்வாராய்ச்சி ஞானத்திலே முன்னேறும்போது ஆன்மாவின் அறிவிலே ஏற்படும் செயற்பாடுகளைப் பத்துவகை ஞானப் படிநிலைகளாகச் சாத்திர நூல்கள் வகுத்துக் கூறுகின்றன அவையே தசகாரியம் ஆகும்.

ஞானத்தைப் பெறும் வழிகளாக இருக்கின்ற சரியை, கிரியை, யோகம் என்னும் தவச் செயல்கள் உடம்பின் செயல்கள் ஆகும். ஆனால் ஞானம் பெற்றபின் அந்த ஞானத்தின் படிநிலை வளர்ச்சியாக அமைகின்ற தசகாரியச் செயல்கள் உடம்பின் செயல்கள் அல்ல; அறிவின் செயல்களாகும். அதனால் 'ஞானச் செய்தி' எனப்படுகின்றன. செய்தி-செயல்'.

தச காரியங்களாவன, தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவ ரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பவையாகும். பரகதியை அடைவதற்கு சிவனடியார்கள் மேற்கொள்கின்ற இப்பத்துச் செய்கைகளைப்

"பத்துக் கொலா மடியார்செய்கை தானே"[2].

- என்று அப்பர் சுவாமிகள் குறிப்பிடுகிறார்.

**தத்துவ ரூபம்**

மண் முதலாக நாதம் (சிவம்) ஈறாக உள்ள 36 தத்துவங்களைப் பற்றியும், அவை இன்ன இன்ன தன்மையுடையன என்பது பற்றியும் அவற்றிற்குத் தோற்ற ஒடுக்கங்கள் உண்டு என்பது பற்றியும் அவை 'மாயை' என்னும் காரணத்தினின்றும் பரிணாம வளர்ச்சியில் தோன்றுவன என்பது பற்றியும் மீண்டும் அவை அதே முறையில் ஒன்றினுள் ஒன்று ஒடுங்குவன என்பது பற்றியும், ஆசிரியரது

உபதேசத்தைக் கேட்டும், தம் அறிவுக்குப் பொருந்தும் வகையில் சாத்திர நூலகளைப் பயின்றும் ஆராய்ந்துப் பொதுவாக அறிந்து கொள்வது தத்துவ ரூபமாகும்.

"மண் முதல் சிவம தீறாம்
வடிவுகாண் பதுவே ரூபம்"[3]

- என்கிறது உண்மை நெறி விளக்கம்.

இந்த 36 தத்துவங்களைச் சார்ந்திருக்கின்ற வரையில் உயிர் தன்னியல்பை உணர முடியாது. தத்துவங்கள் தன்னியல்பையே காட்டி நிற்க உயிரும் அதன்வழியே மயங்கி நிற்கும். இதனையே "தத்துவ வன்ன ரூபன்" என்று சிவப்பிரகாசம் கூறும் இவ்வாறு உயிர் உடலெடுத்து இவ்வுலகை அனுபவிக்கவும் அதன் வழி மயங்கி நிற்கவும் நிலைக்களனாக இருக்கின்ற தனு, கரண, புவன, போகம் என்னும் நான்கும் பாசத்தின் வடிவம் என்பதை உயிர் உணர்கின்ற செயலே தத்துவரூபம் ஆகும்.

தத்துவ ரூபம் என்னும் நிலையில் உயிர், தத்துவங்களின் உண்மை இயல்பைப் பொதுவாக அறிந்து நிற்பதால் அது பொதுக்காட்சி எனப்பட்டது.

**தத்துவ தரிசனம்**

தத்துவங்கள் அனைத்தும் அறிவற்றவை - சடம் என்பதையும் ஆன்மா இவற்றின் வேறாகிய அறிவுடைய பொருள் - சித்துப்பொருள் என்பதையும் ஞானாசிரியர் அறிவுறுத்தியபடி அறிந்து உணர்வது தத்துவ தரிசனம் ஆகும்.

"....மண் முதல் சிவம தீறாம்
மலம் சடம் என்றல் காட்சி"[4]

- என்கிறது உண்மைநெறி விளக்கம்.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் புறக் கருவிகளும் (அறி கருவிகள்) மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்னும் அகக் கருவிகளும் உயிரைக் கூடியிருந்து தொழில் புரிபவை. ஆனால் தானே தனித்து நின்று தொழில்புரிய மாட்டாதவை. அவை தம்மையும் அறியா; தம்மைச் செலுத்தும் உயிரையும் அறியா.

" விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தளந்து அறியா"[5]

- என்கிறது சிவஞானபோதம். இத்தகைய தத்துவக் கருவிகளின் துணைகொண்டு அறியப்படுபவை அனைத்தும் அறிபவனுக்கு வேறானவையாகும்.

"அறிபொருள் அசித்தாய் வேறாம்....."[6]

- என்கிறது சித்தியார்.

இவ்வாறு தன்னின் வேறாகிய பாசத்தைச் சடம் என்று உணர்ந்தாலும் அவற்றினின்று விடுபட முடியாமல் தத்துவங்களோடு மனதளவில் ஒன்றியும் வேறுபட்டும் நிற்கின்ற இத்தகைய தத்துவ தரிசன நிலை ஐயக்காட்சி எனப்பட்டது.

தத்துவ தரிசனத்தில்,

பொய்யாகிய பாசத்தினால் வரும் துன்பத்தையும் மெய்யாகிய இறையில் தோன்றும் பூரண இன்பத்தையும் பொதுவாக அறிந்திருந்தாலும் மனதில் தெளிவு இல்லாமல் ஒரு மயக்க உணர்வே மேலோங்கி இருக்கும்.

## தத்துவ சுத்தி

தத்துவங்கள் தன்னின் வேறானவை என்பதை முதலில் பொதுவாகவும், பின்னர் சிறப்பாகவும் உணர்ந்தாலும் உயிர் அதனின்றும் நீங்குவதற்கு தத்துவங்களால் வரும் அறிவு துணை செய்யாது. இம்மெய்யுணர்வை அளிக்கவல்லது சிவஞானமே ஆகும். தத்துவ தரிசனம் பெற்ற உயிர்க்கு, இறைவனே ஞானாசிரியர் வடிவில் நின்று சிவஞானத்தை உணர்த்துவான். இவ்வாறு ஞானோபதேசம் பெறும்பொழுதுதான் தத்துவக் கூட்டங்களினால் உண்டான மயக்கம் உயிரறிவினின்றும் நீங்கும். இதுவே மலநீக்கம் என்றும் தத்துவ சுத்தி என்றும் சொல்லப்படும். இதனை,

".... மண் முதல் சிவம தீறாம்
வகைதனில் தான்நி வாது
கண்ணுதல் அருளால் நீங்கல்
சுத்தியாய்க் கருதும் அன்றே"[7]

- என்கிறது உண்மைநெறி விளக்கம்

தத்துவங்கள் யாவும் அறிவுடைய பொருள்கள் போல் தோன்றுவதற்கு உயிரினது அறியாமையே காரணமாகும் இறை அருளினால் - குருவருட் பார்வையில் இந்த அறியாமை நீங்குவதால் தத்துவங்களின் உண்மையியலபு புலப்பட உயிரானது அறிவளவில் அவற்றினின்றும் நீங்கி சுத்திபெறும்

கருவிகளுடன் கூடி இருககும பொழுதே இததனைகய மெய்யுணர்வைப் பெற்ற நிலையில், அக்கருவிகள் செயல்பட்டு உலகியலபுகளைக் காட்டி நின்றாலும் உயிரறிவு அவற்றோடு பொருந்தாமல் இறையருளையே நினைந்து நிற்கும கருவிகளால ஏற்படும் மயக்கம் நீங்கிய நிலையாதலால் இது தெளிவுக் காட்சி எனப்பட்டது

## ஆன்ம ரூபம்

அறியாமை சிறிது விலகிய நிலையில் உயிர் தத்துவங்களின் இயலபை நன்கு அறிந்ததோடு அவற்றின் வேறான - அறிவுடைய சித்துப் பொருளானத் தன் இயல்பையும் அறிந்து நிற்பதே ஆன்ம ரூபமாகும்.

"பாயிருள் நீங்கி ஞானந்
தனைக் காண்டல் ஆன்ம ரூபம்"[8]

தத்துவங்களுக்கு அறிவு, இச்சை, செயல் இவை கிடையா ஆன்மாவிற்கே இவையெல்லாம் உண்டு. எனினும் இவைத் துணையின்றி தானாகத் தொழிற்படா தத்துவங்களைச் சார்கையில் அத் தத்துவங்களின் தன்மையைப் பெறும் சிவத்தைச சார்கையில சிவமாந்தன்மையைப் பெறும் இதனைச் 'சார்ந்ததன வண்ணமாதல்' என்பர்

உயிர், தத்துவங்களாகிய அசத்தும் அல்ல, சிவமாகிய சத்தும அல்ல ஆனால் இவ்விரண்டையும் அறிந்து அனுபவிக்கும பொருள் உயிர் மட்டுமே இவ்வகைப்பட்ட உயிரின் இயல்பைப பொதுவாக அறிதலே ஆன்ம ரூபமாகும

தத்துவங்களினின்றும் நீங்கி தன் வியாபகத் தன்மையை எய்திய உயிர் அந்நிலையில் தன் உண்மை இயல்பை அறிந்தபோதும் 'யானே பிரமமம்' எனத் தருக்குற்று நிற்றல் ஆன்மரூபமாகும என்று தணிகைப் புராணம் எடுத்துக்காட்டுகிறது[9]

## ஆன்ம தரிசனம்

ஆன்மா, தானே எதையும் அறியவல்லது அல்ல என்பதையும், திருவருள் துணையால் தான் எதையும் அறியும் என்பதையும் அத்திருவருளைத் துணைக்கொண்டு அறிந்து தெளிவதுவே ஆன்ம தரிசனமாகும்.

"... நீயும்நின் செயலொன் றின்றி
நிற்றலே தரிசனந் தான்..."[10]

-என்கிறது உண்மைநெறி விளக்கம்.

உண்மையில், தத்துவங்களைச் சார்ந்து அவற்றின் தன்மையைத் தன் தனமையாகக் கொண்டு நிற்கும் கட்டுநிலையையும், அத்தத்துவங்களைத் தன்னின் வேறாகக் கண்டு இறையை உணர்வதாகிய முத்தி நிலையையும் உயிருக்குத் தருவது இறைவனது திருவருளேயாகும்.

உயிருக்கு, தன்செயல் என்பது கிடையாது; கருவி கரணங்களை இணைத்து, உயிரினது அறிவு, இச்சை, செயல்களை நிகழ்விப்பவன இறைவனே. இதனை,

"பாசம் சடம்; உயிரோ பற்றி யறியாது
ஈசன் இரண்டும் இணைத்தாட்டி..."[11]

என்று சிவபோகசாரத்தில் ஸ்ரீ குருஞானசம்பந்தர் குறிப்பிடுகிறார் இத்தகைய இறைவனது, உபகாரத்தை, குருவருளின் துணையால் ஆன்மா தன்னுள் அறிந்து உணர்வதுவே ஆன்மதரிசனமாகும்.

எனினும், ஆன்ம தரிசனத்தில், ஆன்மா தான் முதற்பொருள் அன்று என்பதை உணர்ந்தாலும், தானும் சிவமும் ஒன்று என்ற சிவசம உணர்வுடன் திகழும்; சிவனருளால் நான் செய்கிறேன் என்று எண்ணுகின்ற தற்போதம் சிறிது தலைதூக்கி நிற்கும். இதுவும் ஒருவித மயக்கக் காட்சியே.

## ஆன்ம சுத்தி

திருவருளைத் தலைப்பட்டாலும் தெளிவு பெறாத நிலையில் உள்ள ஆன்மாவிற்கு ஞானாசிரியர், "காய்ச்சிய இரும்பினிடத்தே தங்கிய நெருப்பே சுடுதல் தொழிலைச் செய்யுமின்றி சுடுதல் இரும்பின தொழிலன்று. அதுபோல திருவருளே ஐந்தொழில் செய்ய வல்லது.

ஆன்மாவிற்கு அத்தொழில் எவ்வாற்றானும் இல்லை" என்று அறிவுறுத்துவார். அவ்வுபதேசத்தின் வாயிலாக ஆன்மா தன் உண்மை இயல்பை உணர்ந்து தற்போதம் அடங்கப் பெற்று, திருவருளோடு ஒன்றி, தான் வேறாகத் தோன்றாமல், அதிலேயே அழுந்தி நிற்கும் அதுவே ஆன்ம சுததியாகும்.

"போய் இவன் தன்மை கெட்டுப்
பொருளிற் போய் அங்குத் தோன்றா
தாய்விடில் ஆன்ம சுத்தி"[12]

என்பது உண்மைநெறி விளக்கம்.

ஆன்ம சுத்தி நிலையில் உயிர்கள் தன்செயல் எதையும் காண மாட்டா அனைத்தும் சிவன் செயலே என்பதை உணர்ந்து தன்முனைப்பு அற்று இருக்கும். இதனை,

"ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும் - மாதேவா
நின் செயலே என்று நினதருளா லுணரின்
என் செயலே காண்கி லேனே"[13]

என்று சிவபோகசார பாடல் உணர்த்துகிறது.

ஆணவமலத்தால் தோன்றும் 'யான்' என்னும் தன் முனைப்பை - சீவபோதத்தைத் திருவருளாகிய சிவபோதத்துள் அடக்கி, தன்னறிவை இழந்து நிற்கும் நிலை ஆன்ம சுத்தி நிலையாகும்.

***சிவ ரூபம்***

'யானே பரம்பொருள்' என்று கருதியிருந்த ஆன்மாவுக்கு ஞானாசிரியர், எல்லாவற்றிற்கும் அப்பாலாய், எல்லாம் தன்னுள் அடங்கிய பரமாய், ஒருவனாய் ஒன்றிலும் தோயாது இருக்கின்ற சிவனின் உண்மை இயல்பை உபதேசிப்பார். மேலும், உயிர்களின் பொருட்டு தன் சக்தியையே தனக்கு வடிவமாகக் கொண்டு சித்தாகிய உயிர்களோடும் சடமாகிய உலகப் பொருள்களோடும் ஒன்றாய், வேறாய், உடனாய் கலந்து நின்று அவ்வுயிர்களைப் பக்குவப் படுத்தி, ஞானத்தை வளாக்கின்ற அவனது பொது இயல்பையும் எடுத்துரைபபார் அதன் மூலம் உயிர், சிவனது ரூபத்தை தன் அறிவில் காணுதலே சிவரூபம ஆகும்.

எவவடி வுகளும தானாம்
எழிற்பரை வடிவதாகிக்
கவ்விய மலத்துஆன் மாவைக்
கருதியே ஒடுக்கி ஆக்கிப்
பவ்வம் ஈண்டு அகலப் பண்ணிப்
பாரிப்பான் ஒருவன் என்று
செவ்வையே உயிருட் காண்டல்
சிவரூப மாகும் அன்றே [14]

என்கிறது உண்மைநெறி விளக்கம்.

சிவனது ரூபத்தை உள்ளது உள்ளவாறு உணர்கின்ற பொழுதே ஆன்மா தன்னையும் முழுமையாக உணர்கிறது.

நின்னைக் காணா மாந்தர்
தன்னையும் காணாத் தன்மையோரே[15]

என்ற பட்டினத்தார் பாடல் இதனைத் தெளிவுறுத்துகிறது.

"தன்னறி வறியுந் தன்மை தன்னாலே தனையறிந்தால்
தன்னையும் தானே காணும் தனாதுவாகி நின்றே"[16]

என்று சிவப்பிரகாசமும் இதனை எடுத்துக்காட்டுகிறது

இதனால் ஆன்மதரிசனமும் சிவரூபமும் உடன் நிகழ்ச்சிகளாகக் கருதப்படுகின்றன.

*சிவ தரிசனம்*

இவ்வாறு இறையியல்பையும் தன்னியல்பையும் உள்ளவாறு உணர்ந்த ஆன்மா, பார்க்குமிடமெல்லாம் சிவமாய் காட்சி அளிக்க, 'யான்', 'எனது' என்னும் தற்போதம் அடங்கப்பெற்றது அக்காட்சியிலேயே முழுவதுமாக அடங்கி பேரானந்தத்தை அனுபவித்து நிற்கின்ற நிலையே சிவதரிசனமாகும்

தன் செயல் என எதுவுமின்றி அனைத்தும் சிவன் செயலே எனத் தெரிந்து தன் அறிவை இழந்து நிற்கின்ற ஆன்ம சுத்தி நிலையும் சிவதரிசனமும உடன் நிகழும் நிகழ்ச்சிளாகும்.

ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் இறைவனது ஐந்தொழில்களை எல்லாவிடத்தும் நோக்கி, அதிலே

அமுந்தி அங்கு எழுகின்ற மேலான இன்பத்தைக் கண்டு அதை அடைதல் சிவதரிசனம் என்பர்.[17]

'யான்' எனும் போதம் அடங்குவது அடியாக, சிவக்காட்சி பெறுவது முகமாக, உரையிறந்த இன்பத்தை அனுபவிப்பதே முடியாக உள்ளதை உணர்ந்து, திருவருட் செயலையும் தெளிந்து, கருவி கரணங்களோடு கூடாமல், கேவலநிலையிலும் பொருந்தாமல் திருவருளைச் சார்ந்து அவ்விடத்துத் தோன்றும் ஆனந்தத்தைப் பெறுவதற்கு அதனைச் சேர்தல் சிவதரிசனம் என்று உண்மை நெறி விளக்கம் எடுத்துரைக்கிறது[18].

***சிவயோகம்***

சிவதரிசனம் கிடைத்தும் பழக்கம் காரணமாக எழுகின்ற 'யான்', 'எனது' என்னும் தற்போதத்தை அஞ்செழுத்து மந்திரத்தைச் சிந்திக்கும் மூலமாகவும், இறைபணி நிற்றல் மூலமாகவும் அடக்கி, தன் செயலற்று, சிவனருளோடு ஒன்றுதல் சிவயோகமாகும்.

"எப்பொருள் வந்துற்றிடினும் அப்பொருளைப் பார்த்திங்கு

......................................................

எப்பொருளும் அசைவில்லையென அந்தப் பொருளோடு

இயைவதுவே எனும் இறைவன் மொழியே...."[19]

என்கிறது உண்மைநெறி விளக்கம்.

யோகம் என்பதற்கு ஒன்றுதல் என்பது பொருள். சிவத்தோடு ஒன்றி, ஏகனாகி மாயா காரியங்களினின்றும் அறிவால் முழுதும் நீங்கி நன்மை வந்துறினும் தீமை வந்துறினும் ஒரே தன்மைத்தாய், நன்வினையைச் செய்விப்பதும், தீவினையைச் செய்விப்பதும் அவற்றின் புசிப்பும் அவனருளே என்பதை முழுமையாக உணர்ந்து சிவானந்தத்தைத் தலைப்படுதலே சிவயோகத்தின் பயனாகும்.

"நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே..."[20]

என்ற திருவாசக வரிகளும்,

"நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்
ஏமாப்போம் பிணியறியோம் விடு...."[21]

என்ற தேவார வரிகளும் இதனைத் தெளிவுபடுத்துகின்றன.

"அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகனாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடும் வல்வினை இன்றே.."[22]

- என்ற சிவஞானபோத சூத்திரம் சிவயோக நிலையை எடுத்துக்காட்டுகிறது.

சிவயோகநிலை என்பது ஆன்மா, எல்லாம் திருவருட்செயல் என்பதை உணர்ந்ததால், அத்திருவருளில் அடங்கி அத்திருவருளே கண்ணாக அதனோடு ஒன்றி நிற்கின்ற 'அருள் நிலை' ஆகும். இதனை ஞானத்தில் யோகம் என்னும் படிநிலை என்பர். இத்தகைய அருள் நிலையை,

"அருளே உலகெலாம் ஆள்விப்பது ஈசன்
அருளே பிறப்பு அறுப்பதானால் - அருளாலே
மெய்பொருளே நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவது எனக்கு"[23]

- என்று அற்புதத் திருவந்தாதியில் காரைக்கால் அம்மையார் எடுத்துக் காட்டுகிறார்.

இச் சிவயோகமாம் அருள்நிலையே அடுத்ததான ஆனந்த நிலைக்கு இட்டுச் செல்லும்.

*சிவபோகம்*

போகம் என்பதற்கு இன்பம் அனுபவித்தல் என்பது பொருள் சிவபோகம் பேரின்பத்தை அனுபவித்தலாகும். சிவயோகத்தில் அழுத்திய ஆன்மாவைச் சிவன் தன்னைவிட்டு நீங்கவிடாது, தன் திருவடியில் இரண்டறக் கலக்கச் செய்து, தனது பேரின்பத்தை அனுபவிக்கச் செய்வான். அதுவே சிவபோகம் ஆகும். இதனை **"The state of the fullest communion with God's Bless and standing as himself"** என்று கூறுவர்

"ஆன்மா உண்மை இன்பஞான (சச்சிதானந்த) வடிவாகிய சிவனது திருவடி வியாபகத்துள் அடங்கி அவனது எண் குணங்களை அறிந்து இச்சித்து அனுபவித்து உலகை மறத்தலேயன்றித் தன்னையே தான் மறந்து சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாகும் நுண்மையே சிவபோகம் என்று சிவாகமங்கள் கூறும்" என்று களந்தை ஞானப்பிரகாசர் கூறுகிறார்.[24]

"..... சுத்தமாய் ஒன்றாகி நின்ற வுணர்வும் ஒழிந்தக்கால்

அன்றோ சிவபோ கமாம்"[25]

என்று ஸ்ரீ குருஞான சம்பந்தர் குறிப்பிடுகிறார்.

இவ்வாறு சிவபோகத்தைத் தலைப்பட்ட ஞானியர் எச்செயலைச் செய்தாலும் அதனைத் தன் செயலாக நினையாமல் அவன் செயலாகவே கருதி நிற்பர். அவர்கள் பார்க்கும் பொருளனைத்தும் சிவமாகவே அவர்களுக்குக் காட்சியளிக்கும்,

"காணும் கரணங்களெல்லாம் பேரின்பமெனப்
பேணும் அடியார் ...."[26]

என்ற திருவாசக வரியில் இதனை அறியலாம்.

"பாதங்கள் செய்திடினும் கொலை களவு கள்ளுப்
பயின்றிடினும் நெறியல்லா நெறி பயிற்றி வரினும்
சாதிநெறி தப்பிடினும் தவறுகள் வந்திடினும்
தனக்கெனவோர் செயலற்றுத் தான் அதுவாய் நிற்கில்
நாதன் இவன் உடல் உயிராய் உண்டுறங்கி நடந்து
நானா போகங்களையும் தானாகச் செய்து
பேதமற நின்று இவனைத் தானாக்கி விடுவன்
பெருகு சிவபோகமெனப் பேசுநெறி யிதுவே"[27]

என்று உண்மைநெறி விளக்கம் சிறப்பாக எடுத்துரைக்கிறது.

உயிர் தானென வேறாக நில்லாது சிவத்தின் கண் முழுமையாக அழுந்தி சிவானந்தத்தை நுகருகின்ற இந்நிலையே "சிவமாந் தன்மை பெறல்" என்பர்.

இவ்வாறு வாக்கு மனம் எட்டாத வீட்டில், இரவுபகல் இல்லாத இன்ப வெளியில், பேசா அனுபூதி நிலையில் பரமானந்தத்தை ஆன்மா அனுபவிக்கும் நிலையே தசகாரியப் படிநிலையின் இறுதியான பூரண நிலையாகும்.

### அடிக்குறிப்புகள்

1. தசகாரியம், ஆ. ஆனந்தராசன், ப.1.
2. திருநாவுக்கரசர் தேவாரம், 4:18:10.
3. உண்மை நெறி விளக்கம், 1.

4. உண்மைநெறி விளக்கம், 1.
5. சிவஞானபோதம், சூ.5.
6. சித்தியார், 245.
7. உண்மைநெறி விளக்கம், 1.
8. உண்மைநெறி விளக்கம், 2.
9. தணிகை புராணம், 2.
10. உண்மைநெறி விளக்கம், 2
11. சிவபோகசாரம், 81.
12. உண்மைநெறி விளக்கம், 2.
13. சிவபோக சாரம், 45.
14. உண்மைநெறி விளக்கம், 3.
15. திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, பட்டினத்தார், 874, அடி.35, 36
16. சிவப்பிரகாசம், 72.
17. உபதேசமாலை, 8.
18. உண்மைநெறி விளக்கம், 4.
19. உண்மைநெறி விளக்கம், 5.
20. திருவாசகம், குழைத்த பத்து, 7.
21. திருநாவுக்கரசர் தேவாரம், 6:
22. சிவஞானபோதம், சூ.10.
23. காரைக்கால் அம்மையார், அற்புதத் திருவந்தாதி, 9.
24. தசகாரியம், ஆ. ஆனந்தராசன், ப.52.
25. சிவபோகசாரம், 65.
26. திருவாசகம், பண்டாயநான்மறை, 6.
27. உண்மைநெறி விளக்கம், 6.

## இயல் ஏழு

# பன்னிரு திருமுறைகளில் ஞானச் செய்திகள்

சைவ உலகின் ஞானக் கருவூலமாக விளங்கும் பன்னிரு திருமுறைகளும் சிவஞானம் பெற்ற சீரடியார்கள் அருளிச் செய்த பனுவல்களின் தொகுப்பாகும். சரியை, கிரியை, யோகம் என்னும் ஞானச சாதனங்களை அவை எடுத்துக் கூறுவதோடு அருளாளர்கள் பெற்ற ஞான அனுபவத்தையும், அதன் பயனாம் முத்திப் பேற்றினையும் அவை எடுத்தக் காட்டுகின்றன.

### திருஞான சம்பந்தர் தேவாரத்தில் ஞானம்

சிவனடியே சிந்திக்கும் திருபெருகு சிவஞானமும், பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானமும் ஞானப்பாலுடனட அந்நிலையில் ஒருங்கே கைவரப்பெற்ற திருஞானசம்பந்தப் பிள்ளையாா அருளிச் செய்த 384 பதிகங்களைக் கொண்ட 'திருககடைக்காப்பு' முதல மூன்று திருமுறைகளாக அமைந்துள்ளன. அவற்றுள் ஆங்காஙகே அமைந்த 'ஞானம' பற்றியச் செய்திகள் சிலவற்றை ஈண்டு காண்போம

அருஞானம் வல்லார் அழுந்தை மறையோர்
பெருஞானமுடைப் பெருமா னவனைத்
திருஞான சம்பந்தன செந்தமிழ்கள்
உருஞானம் உண்டாம் உணர்ந்தார் தமக்கே.[1]

இப்பாடலில், அருஞானம் என்று கலைஞானமாகிய அபரஞானத்தைக் குறிப்பிடுகிறார். வேதங்கள் மூலமாகப் பெறப்படுகினற கலைஞானம் வல்ல மறையோர் ஏத்துகின்ற, பெருஞானமுடைய திருஅழுந்தூர் பெருமானைத். திருஞானசம்பந்தர் அருளிய செந்தமிழ்கள கொண்டு ஏத்த வல்லவர்கள், உருஞானமாகிய உண்மை ஞானத்தைப (பரஞானம்) பெற்று உய்தியடைவர் என்று கூறி உயர் ஞானம இரண்டையும் எடுத்துக் கூறுவதோடு 'பெருஞானம்' என்று ஞானமே வடிவான இறையையும் எடுத்தேத்துகிறார்

இறைவனே பக்குவமுற்ற ஆன்மாவிற்கு ஞானத்தை நலகுவான் ஞான வடிவினனான அவனே அதனை அருள வல்லவன். இக்கருத்தைத் திருஞானசம்பந்தர்,

"ஞானத் திரளாய் நின்ற பெருமான் நல்ல அடியார் மேல்
ஊனத் திரளை நீக்குமதுவும் உண்மைப் பொருள்போலும்...."[2]

என்று திருவண்ணாமலைத் திருப்பதிகத்தில் குறிப்பிடுகிறார்.

இவர் கலைஞானமும் கைவரப் பெற்றவர் என்பதை

"... காழி நகரான் கலைஞான சம்பந்தன் ...."

"... ஞான முணர்வான் காழி ஞானசம்பந்தன் ...."

"... மறை ஞான ஞானமுனிவன்...."

போன்ற அடிகள் எடுத்துக் காட்டுகின்றன.[3] மேலும் அவரது பாடல்கள் அனைத்துமே கலைஞானம் தரவல்ல, கலைகள் என்பதாக,

"... தமிழ்ஞான சம்பந்தன் சொன்ன கலைகள் இவைவல்லார் கவலை கழிவாரே"[4]

என்று அடிகள் உணர்த்துகின்றன.

இறைவனது திருவடிஞானமே முத்திபேற்றை அளிக்கவல்லது என்ற சித்தாந்த கருத்தை, அவருடைய

"படிநோன் பவையாவர் பழியில் புகழான
கடி நாணிகழ் சோலை கமழும் வடுகூரைப்
படியான சிந்தை மொழியார் சம்பந்தன்
அடிஞானம் வல்லாரடி சேர்வார்களே"[5]

எனத் திருவடுகூர் திருப்பதிகப் பாடல் எடுத்துக்காட்டுகிறது. மேலும்,

"வீடும் ஞானமும் வேண்டுதிரேல் விரதங்களால்
வாடின் ஞாமென் னாவது மெந்தை வலஞ்சுழி
நாடி ஞான சம்பந்தன் செந்தமிழ் கொண்டிசை
பாடும் ஞானம் வல்லாரடி சேர்வது ஞானமே"[6]

என்ற திருவலஞ்சுழி திருப்பதிகப் பாடலும் "இறைவனடி ஞானமே ஞானம்" என்ற சித்தியார் கருத்தைத் தெளிவுபடுத்துகிறது.

ஞானவிளக்கம் பெறுவதற்குத் துணையாக இருக்கின்ற "நமசிவாய" மந்திரத்தை இரண்டு பதிகங்களில்[7] ஞானசம்பந்தர் எடுத்துரைக்கிறார்.

சிவவேடத்தை விருப்புடன் தாங்கி ஐம்புலன்களும் மனமும் சிந்தையும் அழிந்த நிலையில்-தன் முனைப்பற்று இறையருளில் முழுமையாக அழுந்திய நிலையில் அச்சிவ ஞானியர்க்கு முதுகுன்றம் மேயபிரான் அறம், பொருள், இன்பமோடு வீடு பேற்றையும் அருளுவான் என்று திருமுதுகுன்றப் பதிகத்தில்[8] குறிப்பிடும் ஞானசம்பந்தர் இறைவனே குருவாய் வந்து ஞானம் அருளுவான் என்னும் சித்தாந்தக் கருத்தை,

"..... குருவராய் நின்றார் குரைகழல் வணங்கக்
கோணமாமலை யமர்ந்தாரே"[9]

என்று குறிப்பிடுகிறார்.

***திருநாவுக்கரசர் தேவாரத்தில் ஞானம்***

திருவாளன் திருநீற்றைத் தமக்கையார் திலகவதியார் அளிப்ப தமக்குப் பெருவாழ்வு வந்ததென அதனைப் பெற்று அணிந்து கொண்ட அந்நிலையில் ஞானம் கைவரப் பெற்ற திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த தேவாரத் திருபதிகங்கள் 4, 5, 6-ம் திருமுறைகளாக அமைந்துள்ளன. அவற்றுள் காணலாகும் ஞானச் செய்திகளில் சிலவற்றைக் காண்போம்.

"ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள்
ஞானத்தால் தொழுவேன் நானல்லேன்
ஞானத்தால் தொழுவார் தொழக் கண்டு
ஞானத்தாய் உனை நானும் தொழுவனே"[10]

என்ற பாடலில் சில ஞானியர் ஞானநெறியின் நின்று தொழும் திறம் பற்றிக் கூறும் அப்பர் சுவாமிகள் அவ்வாறு அவர்கள் தொழுவதைக் கண்டுத் தானும் ஞானத்தால் தொழுவேன் என்று காட்டுகிறார். பேரறிவின் வடிவாய் இருக்கும் இறைவனை "ஞானத்தாய்" என்று விளவுகிறார். மேலும், "ஞானமுதல் தனிவித்து" என்றும் ஞானம் விளைவதற்கிடமாய் அவன் விளங்குவதையும் ஞானமயமான சடையை உடையவன் என்றும் அஞ்ஞானமாகிய இருளை நீக்கி ஞானத்தளையிட்டு ஆன்மாக்களைக் காக்கின்றான் என்றும்

"முன்னை ஞான முதல்தனி வித்தினைப்
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே"[11]

என்ற பாடல் மூலம் எடுத்துரைக்கிறார்.

கல்வியாம் கலைஞானத்தையும், அனுபூதியாம் மெய்ஞ்ஞானத்தையும் தரவல்லது "நவசிவாய" மந்திரம் என்பதனை "நமச்சிவாயவே ஞானமும் கல்வியும்...." என்ற பாடலடியில் காட்டும அப்பர் சுவாமிகள் வீடுபேற்றை அருளக் கூடிய நன்னெறியாகிய ஞானம "நவசிவாய" மந்திரமே என்று நமச்சிவாய திருப்பதிகத்தில எடுத்துரைக்கிறார்.[12]

"ஞான நாயகன்" (5:84:3) என்றும் "ஞான மூர்த்தி" (5:53:5) என்றும ஞானச் சுடர் (5:49:8) என்றும் ஞான முதல்வன் (5:91:2) என்றும் ஞானக் கொழுந்து (4:15:3) என்றும் மெய்ஞ்ஞானப் பொருளாக (6:67:3) விளங்குகின்ற இறைவன் அடியார்களுக்கு ஞானத்தை வழங்கியதோடு அதனை வளப்பவராகவும் விளங்குகிறார் என்று திருப்புத்தூர் தேவாரப் பதிகத்தில் (6:76:9) குறிபபிடுகின்றார்.

ஞானத்தை அடியவர்க்கு வழங்கும் இறைவன் தாம் அந்த ஞானியரின் ஞானமாகத் திகழ்கிறான் என்று "ஞானத்தா ஞானமானார்....."[13] என்ற திருப்பந்தணை நல்லூர் பதிகப் பாடல் எடுத்துரைக்கிறது. இவ்வாறு இறைவனே ஞானத்தை உள்நின்று உணர்த்துபவன் என்பதனால் "கலைஞானம் கல்லாமே கற்பித்தானை"[14] என்றும் மற்றொரு தேவாரத்தில் குறிப்பிடுகிறார் அப்பர் சுவாமிகள்.

### சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தில் ஞானம்

பன்னிரு திருமுறைகளுள் ஏழாம் திருமுறையாக அமைவது சுந்தர மூர்த்தி சுவாமிகளின திருப்பாட்டு ஆகும். ஓலை காட்டி இறைவனால தடுத்தாட் கொள்ளப்பட்டு, வெண்ணெய் நல்லூரிலே காட்சியும் பெற்று அந்நிலையில் ஞானம பெற்ற சுந்தரமூர்த்தி சுவாமிகளின் அருட் பாடல்களில் காணலாகும் ஞானச் செய்திகளுள் சில:

முத்தி இன்பத்தைத் தரவல்லதாகிய "ஞானம்" அவ்வளவு எளிதில் - நினைத்த அளவில் பெறக் கூடிய ஒன்றன்று. அதனைப் பலப்பல படிமுறைகளிலே அறிவிப்பவன் இறைவன். வானவரும் அறிதற்கரிய இமமெய்ஞ்ஞானத்தைப் பலநெறி முறைகளில் தனக்கு இறைவன் அருளியதைச் சுநதரர்,

"... முத்தியும் ஞானமும் வானவரறியா
முறை முறைபலப்பல நெறிகளும் காட்டிக்
கற்பனை கற்பித்தக் கடவுளை யடியேன்
கழுமல வளநகர் கண்டு கொண்டேனே"[15]

- என்று திருகழுமல திருப்பதிகத்தில் காட்டுகிறார்.

சுந்தரர் ஞானத்தை "மெய்ப்பொருள்" என்றே பல இடங்களில் சுட்டிக் காட்டுகிறார்.

"பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப்
போகமும் திருவும் புணர்ப்பானை ......"[16]

என்று மெய்ப்பொருளாம் ஞானத்தையும் அதன்பயனாம் வீட்டின்பத்தையும் இறைவனே தனக்கருளியதைக் குறிப்பிடுகிறார்.

"மெய்யா மெய்யர் மெய்ப்பொருளே ...."[17] என்று ஞானியரின் ஞானமாய் இறைவன் இருப்பதை சுந்தரரும் எடுத்துக்காட்டுகிறார்.

வீட்டின்பமும் அவனே; அதைத் தரும் ஞானமும் அவனே என்பதைத்,

"திருவும் மெய்ப்பொருளும் செல்வமும் எனக்குன்
சீருடைக் கழல்கள் ........"[18]

- என்ற பாடலில் புலப்படுத்துகிறார்.

***மாணிக்கவாசகர் திருவாசகத்தில் ஞானம்:***

"உள்ளமாகிய புலத்தினைப் பத்தியால் உழுதுத்
தெள்ளு ஞானவித் துறுத்துநற் சிரத்தை நீர்ப் பாய்ச்சிக்
கள்ள வான் பொறி களைகட்டானந்தம் விளைத்துக்
கொள்ளை கூறு மாணிக்கவாசகன் கழல் குறிப்பாம்"
- பேரூர் புராணம்

என்று கச்சியப்ப முனிவரால் போற்றப்படும் மாணிக்கவாசகர் தான் ஞானநெறியிலே நின்று இறையுணர்வைப் பெற்றதோடு தாம் அருளிச் செய்த திருவாசகத்திலும் திருக்கோவையாரிலும் தன் ஞான அனுபவத்தைப் பல இடங்களில் புலப்படுத்தியுள்ளார். இவ்விரு நூல்களும் 8ம் திருமுறையாக அமைகின்றன.

இறைவனே "மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடர்" என்று கூறும் மாணிக்கவாசகர், தானாக அறியும் வல்லமை இல்லாத உயிரின் தன்மையை. "எஞ்ஞானமும் இல்லாதேன்" என்றும் மெய்ஞ்ஞானத்தை உணரவிடாமல் உயிரை மறைக்கும் ஆணவ மலத்தை அஞ்ஞானம் என்றும், அந்த அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவாகவும்,

இன்பப் பெருமானாகவும் இருப்பவன் (சச்சிதானந்தமாக) இறைவனே என்றும் சிவபுராணத்தில் எடுத்துரைக்கிறார்.[19] மேலும் அதில் அமைந்துள்ள

"மெய்யே! உன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்",

"உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா",

"கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார்தம் கருத்தின்
நோக்கரிய நோக்கே...."

என்பது போன்ற வரிகள்[20] ஞானநெறியின் இயல்பை உணர்த்துபவையாக அமைந்துள்ளன.

முதலில் இறைவன் உயிர்களைப் பக்குவப்படுத்தும் பொருட்டுச் செய்கின்ற ஊனநடனத்தையும் பின்னர் பக்குவமுற்ற உயிர்கள் பொருட்டுச் செய்கின்ற ஞான நடனத்தையும்

".... ஊன நாடகம் ஆடுவித்தவா
உருகி நான் உனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடுவித்தவா
நைய வையகத் துடைய விச்சையே"[21]

திருவாரூர் தலத்தில் இறைவன் தனக்கு ஞானம் நல்கியதை,

"தேனமர் சோலை திருவாரூரில்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்"[22]

என்று கீர்த்திக் திருவகவலில் எடுத்துரைக்கிறார்.

தனக்கு ஞானம் நல்கிய இறையை,

"ஞானக் கரும்பின் தெளிவைப் பாகை ...."[23]

"ஞானச் சுடரே..."[24] என்று சில பாடல்களில் கூறும் மாணிக்கவாசகர் அந்த ஞானத்தால் தான் பெற்ற ஆனந்த அனுபவத்தையே பலபாடல்களில் கூறுகிறார்.

ஞானநெறியைப் பின்பற்றி இந்த பிறவியை வெல்வோம் என்பதை, ஞானவாள் ஏந்தி, மாயப்படையை வென்று வானவூர் ஆள்வோம் என்று திருப்படையெழுச்சியில் குறிப்பிடுகிறார்.

"ஞானக் கண்ணினாலே நாடு சிவன் மனிதர்
ஊனக் கண் காண உலகிதனுள் - மானப்
பரிமேல் வரப்பனுவல் பாடினேன் பாதத்தை
உரிமையுற வைப்பாம் உளத்து" - உருத்திராக்க விசிட்டம்

என்று மறைஞானசம்பந்தர் மாணிக்கவாசகரின் ஞானநெறியைச் சிறப்பிக்கிறார்.

எம்மன்ஸ் ஈ ஓயிட் என்பாரின், "தமிழ் மக்களின் ஞானம்" என்னும் ஆங்கில நூலும், (The Wisdom of Tamil People) ஸ்டுடியோ மிஷனலியா என்ற ஆங்கில பத்திரிக்கையில் வந்த யோகும் என்பவரின் "ஞானம் காட்சிப் பொருளாகிறது" (Wisdom made visible) என்ற ஆங்கில கட்டுரையும் முழுமையாக மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத்தை எடுத்துக் கூறுகின்றன என்பதும் இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

### *திருவிசைப்பா, திருப்பல்லாண்டில் ஞானம்*

பன்னிரு திருமுறைகளுள் ஒன்பதாந் திருமுறையாக விளங்குவது திருமாளிகைத் தேவர் முதலாக சேதிராயர் இறுதியாக ஒன்பதின்மர் அருளிச் செய்த திருவிசைப்பா பதிகங்களும் அவர்களுள் ஒருவராகிய சேந்தனார். அருளிச் செய்த திருப்பல்லாண்டு என்னும் பதிகமும் ஆகும். இவ்வொன்பதின்மரும் சிவபெருமானின் திருவருள் பெற்ற சிவஞானியர் ஆவர். அவர்கள் பெற்ற சிவஞான அனுபவத்தைப் பல பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர். அவற்றுள் சிலவற்றை ஈண்டு காணலாம்

"ஞானக் கொழுந்ததுவாகிய கூத்தனே"[25] என்று விளிக்கும் புருடோத்தம நம்பிகள், ஞானத்தால் சிந்தை ஒன்றி வழிபடும் அடியவரை வினைப்பகை, பொய்ப்பகை, அறியாமைப்பகை இவற்றினின்றும் இறைவன் பாதுகாக்கும் திறத்தையும் எடுத்துக் கூறுகிறார்.

திருமாளிகைத் தேவரும், "நினைந்து உருகுபவர் உள்ளத்துள் ஒளிர்கின்ற ஞானச்சுடரே! அழிவில்லாத செம்பொருளே! பாசஞான பசுஞானத்திற்கு அப்பாற்பட்டு சிவஞானத்தால் உணரப்படுகின்ற ஒப்பற்ற ஞான உருவே! தெளிந்த உளப்பளிங்கினில் திரண்டு குவிந்த அழகிய சிவக் குன்றமே! ஞானியர் ஞான உணர்வால் பருகப் பருக அவர்கள் சித்தத்தில் இனிக்கும் சுவை அமைந்த தேனமுதமாக இருப்பவனே! அந்த ஞானத்தின் பயனாய் அவர்கள பெறுகின்ற ஆனந்தக் கனியாக இருப்பவனே!" என்று பலவகையாய் இறைவன் ஞானவருவாய இருப்பதையும் ஞானியர் ஞானத்தால் அவனை உணர்வதையும் உள்பொருளாக அமைத்துப் பாடியுள்ளார்.[26]

சேந்தனாரும், திருபபல்லாண்டிலே, யாவரும் பெறுவதற்கரிய சிவஞானத்தைத் தான் பெற்ற செய்தியை,

“சீரும் திருவும் பொலியச் சிவலோக நாயகன் சேவடிக் கீழ்
ஆரும் பெறாத அறிவு பெற்றேன் பெற்றதார் பெறுவாருலகில்...”[27]

என்று பாடுகிறார்.

### திரு மந்திரத்தில் ஞானம்

திருமூல நாயனார் அருளிச் செய்த திருமந்திரமே பத்தாம் திருமுறையாக அமைந்துள்ளது. ஒன்பது தந்திரங்களாக அமைந்துள்ள இந்நூலில் ‘ஞானம்’ என்று ஒரு தனி தலைப்பை அமைத்துப் பாடியுள்ள திருமூலர் மற்றும் பல இடங்களிலும் ஞானம் பற்றிய செய்திகளை விளக்குகிறார். அவற்றுள் மிகச் சிலவற்றை இங்கு காண்போம்.

“ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே”[28]

என்று எடுத்துக் கூறி முத்திக்குச் சாதனமாகத் திகழும் ஞானத்தைப் பெற்ற ஞானியரே மாந்தரில் சிறந்தோராகக் கருதப்படுவர் என்பதைத் தெளிவு படுத்துகிறார். மேலும், ஞானம் பெற்றபின் உண்டாகும் நான்கு படிநிலைகளை விளக்கும் முகமாக,

“ஞானிக் குடன்குண ஞானத்தில் நான்குமா
மோனிக் கிவையொன்றுங் கூடாமுன் மோகித்து
மேனிற்றலாஞ் சத்தி வித்தை விளைத்திடுந்
தானிக் குலத்தோர் சரியை கிரியையே”[29]

“ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு
ஞானத்தின் ஞானமே நானெனை தென்னாமல்
ஞானத்தில் யோகமே நாதாந்த நல்லொளி
ஞானக் கிரியையே நன்முத்தி நாடலே”[30]

என்ற பாடல்களில் எடுத்துக் கூறுகிறார்.

“ஞானத்தில் ஞானம்” “யான் எனது” என்னும் செருக்கு அறுத்து நிற்கும் முத்திநிலை என்றும், “ஞானத்தில் யோகம்”, முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து நாதாந்தத்தில் தோன்றும் சிவஒளியைக் காணுதல் என்றும் “ஞானத்தில் கிரியை” சிவனது திருவடிப் பேற்றினை நாடுதல் என்றும் “ஞானத்தில் சரியை” என்பது திருவடிப் பேற்றினைத்

"திருமுறைச் செல்வர் நவில நன்கினிது கேட்டல்" என்றும் இதற்கு ப.இராமநாதன் விளக்கம் தருகிறார்.[31]

ஞானம் குரு மூலமே உண்டாவதாகும் என்கின்ற கருத்தை,

"நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றி செய்து
அந்தி மதியனை அரனடி நாள்தொறுஞ்
சிந்தை செய் தாகமஞ் செப்பலுற் றேனே" என்றும்,

"நந்தி அருளாலே மெய்ஞ்ஞானத்துள் நண்ணினேன்" என்றும் அவர் அருளிச் செய்ததிலிருந்து அறியலாம்.[32]

திருவடிஞானம் பெற்ற ஞானியரை அறிந்தோ அறியாமலோ நிந்திப்பவர் துன்புறுவர் என்றும் அவர்களை வந்திப்பவர் தீவினையினின்றும் நீங்கி இன்புறுவர் என்பதை,

"ஞானியை நிந்திப் பவனும் நலனென்றே
ஞானியை வந்திப் பவனு மெய் நல்வினை
யான கொடுவினை தீர்வா ரவன்வயம்
போன பொழுதே புகுஞ்சிவ போகமே"[33]

என்ற பாடல் மூலம் எடுத்துரைக்கிறார்.

### பதினொன்றாம் திருமுறையில் ஞானம்

திருவாலவாய் ஈசன் முதலாக பன்னிருவா பாடிய 40 பிரபந்தங்களின் தொகுப்பே பதினொன்றாம் திருமுறையாக அமைந்துள்ளது. சிவபெருமான் அருள் பெற்ற ஞானியரால் இயற்றப்பட்ட இந்நூல்களின் உட்பொருள் "ஞானம்" பற்றியவையே எனினும் ஞானம் பற்றிக் குறிப்பிட்டுச் சொல்லப்பட்ட ஒன்றிரண்டு இடங்களை ஈண்டு காண்போம்.

இறைவனே ஞான வடிவானவன் என்பதையும், பக்குவமுற்ற ஆன்மாக்களுக்கு இறைவனே ஞானத்தை உணர்த்துவதோடு தானும் உடன் நின்று அறிகின்றான் என்னும் கருத்தைக் காரைக்கால் அம்மையார்,

"அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே - அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விரிசுடர்பார் ஆகாசம்
அப்பொருளும் தானே அவன்"[34]

என்று அற்புதத் திருவந்தாதியில் எடுத்துக் கூறுகிறார்.

யாராலும் காண்டற்கு அரிய இறைவனை "வானத்தான்", "உம்பர்கோன்", "கயிலாயத்தான்", என்றெல்லாம் பலர் கூறினாலும், அவன் "ஞானத்தான்" என்றும் "என் நெஞ்சத்தான்" என்றுமே நான் கூறுவேன் என்று அவர் கூறும் இடம் நயமுடையதாகும்.

பட்டினத்தடிகள், திருக்கழுமல மும்மணிக்கோவையில்

"ஞான போனகம் அருளட்டிக் குழைத்த
ஆனாத் திரளை அவன்வயின் அருள ....."[35]

என்று இறைவன் ஞானசம்பந்தருக்கு ஞானத்தோடு அருளையும் குழைத்து அளித்த பெருமையைச் சுட்டிக் காட்டுகிறார்.

மேலும், திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில் பக்குவமுற்ற உயிர்கள் ஞானம் பெற்றபின் பெறும் ஆன்ம தரிசனத்தையும் சிவதரிசனத்தையும்,

"மாயப் படலம் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றபின் யானும்
நின்னை பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலும்
என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன்
நின்னிலை அனைத்தையுங் கண்டேன் ....."[36]

என்று தெளிவாக எடுத்துக் காட்டுகிறார்.

*பெரியபுராணத்தில் ஞானம்*

அறுபத்து மூன்று அருட்பெரும் ஞானியரின் அருள் வாழ்க்கையைச் சித்தரிக்கும் அருள் நூலாம் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம் பன்னிரண்டாம் திருமுறையாக அமைகிறது சிவபெருமானின் பூரண ஞானம் கைவரப்பெற்ற சேக்கிழார் பெருமானின் திருவாக்கில் அமைந்த இந்நூல் மக்களின் சிந்தையிருள் போக்கி ஞானவொளி தந்து பேரின்ப முக்திக்கு சாதனமாவதன்றி உலகியல் நல்வாழ்விற்கு வழிவகுக்கும் கலைஞானக் களஞ்சியமாகவும் திகழ்கின்றது.

இங்கிதன் நாமம் கூறின்
இவ்வுல கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டும் மாக்கள்
சிந்தையுட் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப்
புறஇருள் போக்குகின்ற

. செங்கதி ரவன்போல் நீக்கும்
திருத்தொண்டர் புராணம் என்பாம்.[37]

என்பது நூல்பயன் கூறும் பாடலாகும். அவர் ஞானம் பற்றி எடுத்துரைக்கும இடங்கள் பலப்பல. எனினும் ஒரு சிலவற்றை மட்டும் ஈண்டு காண்போம்.

மெய்ஞ்ஞானம் கைவரப் பெற்ற ஞானியரின் இயல்பை எடுத்தக்காட்டவந்த சேக்கிழார் திருக்கூட்டச் சிறப்பிலே,

"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிட லேஅன்றி
வீடும், வேண்டா விறலின் விளங்கினார்"[38]

என்று ஞானியரின் இருவினை ஒப்பு நிலையை மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறார்.

தில்லைவாழ் அந்தணர்களின் பெருமையை எடுததுரைக்கும் சேக்கிழார் அவர்கள் ஞானத்தின் நான்கு படிநிலைகளாகிய ஞானத்திற் சரியை (கேட்டல்) ஞானத்தில் கிரியை (சிந்தித்தல்) ஞானத்தில் யோகம (தெளிதல்) ஞானத்தில் ஞானம் (நிட்டை) என்னும் இவற்றைத் தெளிவாக அறிந்து உணர்ந்தவர்கள் என்று

"ஞானமே முதலா நான்கும் நவையற தெரிந்து மிக்கார்...."[39] என்ற வரியில் எடுத்துக்காட்டுகிறார்.

முற்செய் தவத்தினாலேயே ஞானம் உண்டாவதாகும் என்னும் கருத்தை,

"முந்தை அறிவின் தொடர்ச்சியினால் முகைக்கு மலரின்
வாசம் போல்
சிந்தை மலர உடன்மலரும் செவ்வி உணாவு சிறந்ததால்"[40]

என்று சண்டேசுர நாயனார் புராணத்தில் குறிப்பிடுவதோடு,

கண்ணப்ப நாயனார் புராணத்திலும்,

"முன்பு செய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இனபமான
அன்பினை எடுத்துக்காட்ட அளவிலா ஆர்வம பொங்கி
........................ ................. ..................... .. . . ... . .. . . ....
பேணு தத்துவங்களென்னும் பெருகு சோபானம ஏறி

.................................................................................................

> அங்கணார் கருணை கூர்ந்த அருட்டிரு நோக்கம் எய்தத்
> தங்கிய பவத்தின் முன்னைச் சார்பு விட்டகல நீங்கிப்
> பொங்கிய ஒளியின் நீழல் பொருவில் அன்புருவம் ஆனார்"[41]

என்று இறைவனது அருள் நோக்கினால் கண்ணப்பர் பெற்ற ஞானானுபவத்தைக் கூறும் வகையில் சேக்கிழார் எடுத்துக்கூறுகிறார்.

அறுபத்து மூன்று நாயன்மார்களையும் ஞானியராகச் சித்தரிக்கும் சேக்கிழார், திருஞானசம்பந்தரையே மிகச் சிறப்பாக சிவஞானச் செல்வராகப் பல இடங்களில் ஞானபோனகர் (645, 672, 1089) ஞானப் புகலிப் புனிதர் (209) (907) "மெய்ஞ்ஞானப்பிள்ளை" (333), "ஞானமுண்டார்" (551), ஞானமணி விளக்கு (652) "ஞானத்தின் திருவுரு" (728) ஞானவட்டில், வள்ளையை (810), ஞானப் புங்கவர் (854) ஞானத்தலைவர் (1155) (1118) (1136), மெஞ்ஞான மூர்த்தி (1222) கலை ஞானக்கன்று என்று பல பெயர்களால் குறிப்பிடுகிறார். திருநாவுக்கரசு சுவாமிகளை "ஞான அரசு"[42] என்று சிறப்பிக்கிறார்.

ஆன்மா, தற்போதம் இழந்த நிலையில் இறைவனது எல்லையில்லாக் கருணையையும், உதவியையும் நினைந்து உருகி அவன் மீது கொள்கின்ற அயரா அன்புணர்வே ஞானமாகிறது. இக்கருத்தை,

"ஞானம் ஈசன்பால் அன்பே என்றார் ஞானம் உண்டார்"[43] என்று ஞானசம்பந்தரின் வாக்காக எடுத்துரைக்கும் சேக்கிழார், சிவனடியாரை "ஞானச் செய்தவர்"[44] என்று மானக்கஞ்சார நாயனார் புராணத்தில் குறிப்பிடுகிறார்.

அனைத்துயிர்க்கும் பாசம் அறுத்து முக்தி கூட்டுதல் இறையினது இச்சை என்னுங் கருத்தால் ஆறறிவுடைய உயிர்கள் மட்டுமற்றி பக்குவமற்ற பிறஉயிர்க்கும் இறைவன் ஞானம் அளித்தமையை "மிக்க தவத்தோர் வெள்ளானை"[45] என்றும் "ஞானமுடைய ஒரு சிலந்தி"[46] என்றும் கோச்செங்கட சோழ நாயனார் புராணத்தில் சேக்கிழார் குறிப்பிடுவதிலிருந்து அறியலாம். மேலும், "ஞானச் சார்வாம் வெள்ளாவலுடனே கூட நலஞ்சிறக்க"[47] என்று ஓரறிவு படைத்த தாவரங்களையும் குறிப்பிடுகிறார்.

"ஞானமான அரணமாக"[48] இருக்கும் இறைவனை உணரும் ஞானநெறிக்குச் சாதனமாக அமைவது அஞ்செழுத்து மந்திரம் என்பதை மெய்கண்டார். சிவஞான போதத்தில் ஒன்பதாஞ் சூத்திரத்தில் எடுத்துரைக்கிறார். இதனைச் சேக்கிழாரின்

"ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொலாம் என்று
ஆனசீர் நமச்சிவாயத் திருப்பதிகத்தை அங்கண்
வானமும் நிலமும் கேட்க அருள்செய்து இம்மணத்தில் வந்தோர்
ஈனமானப் பிறவி தீர யாவரும் புகுக என்ன வந்தோர்"[28]

என்ற பாடல் தெளிவுபடுத்துகிறது எனலாம்.

## அடிக்குறிப்புகள்

1. திருஞானசம்பந்தர் தேவாரம், 2:20:11
2. மேலது, 1:69:3
3. மேலது, 2:37:11, 2:60:11, 2:85:11.
4. மேலது, 1:85:11.
5. மேலது, 1:87:11.
6. மேலது, 2:2:11.
7. மேலது, 3:22, 3:49.
8. மேலது, 3:15:6.
9. மேலது, 3:12:39.
10. திருநாவுக்கரசர் தேவாரம், 5:91:3.
11. மேலது, 5:91:2.
12. மேலது, 5:90:2, 4:11:9
13. மேலது, 6:10:10.
14. மேலது, 6:11:4.
15. சுந்தரர் தேவாரம், 7:58:2
16. மேலது, 7:59:1
17. மேலது, 7:52:2
18. மேலது, 7:69:1
19. திருவாசகம், சிவபுராணம், அடி 38-40
20. திருவாசகம், சிவபுராணம், அடிகள் 32, 33, 75, 76
21. திருவாசகம், திருச்சதகம், 95
22. திருவாசகம், கீர்த்தித் திருவகவல், அடி - 73, 74
23. திருவாசகம், திருப்பொற்சுண்ணம், 15
24. திருவாசகம், ஆசைப்பத்து, 10
25. திருவிசைப்பா, 260
26. திருவிசைப்பா, 1
27. திருப்பல்லாண்டு, 7
28. திருமந்திரம், 1440

29. மேலது, 1446
30. மேலது, 1447
31. ப. இராமநாதன், திருமந்திரம் விளக்கவுரை, ப.563.
32. மேலது, 156, 135
33. மேலது, 521
34. காரைக்காலம்மையார், அற்புதத் திருவந்தாதி, 20
35. பட்டினத்தடிகள், திருக்கழுமல மும்மணிக்கோவை, 850,அடி.26,27
36. பட்டினத்தடிகள், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, 874, அடி. 30-34
37. பெரியபுராணம், பாயிரம், 10.
38. பெரியபுராணம், திருக்கூட்டச்சிறப்பு, 8.
39. பெரியபுராணம், தில்லைவாழ் அந்தணர் புராணம், 7.
40. பெரியபுராணம், சண்டேசுர நாயனார் புராணம், 13.
41. பெரியபுராணம், கண்ணப்ப நாயனார் புராணம், 102, 103, 104.
42. பெரியபுராணம், திருநாவுக்கரசர் புராணம், 299.
43. பெரியபுராணம், திருஞானசம்பந்தர் புராணம், 843.
44. பெரியபுராணம், மானக்கஞ்சார நாயனார் புராணம், 24.
45. பெரியபுராணம், கோச்செங்கட்சோழ நாயனார், 2.
46. பெரியபுராணம், கோச்செங்கட்சோழ நாயனார், 3.
47. பெரியபுராணம், கோச்செங்கட்சோழ நாயனார், 13.
48. பெரியபுராணம், முப்போதும் திருமேனி தீண்டுவர் புராணம், 24.
49. பெரியபுராணம், திருஞானசம்பந்தர் புராணம், 15.

